4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10 மதுரை 26-3-72 ஞாயிறு மலர் 7

## தி.மு.க. செயலாளர் வீட்டுமுன் தொழிலாளர் ஆர்ப்பாட்டம்

தூத்துக்குடி, மார்ச் 25—

தூத்துக்குடி ஆர்வி மில்லில் வேலைப் பளுவை உயர்த்தும் ஒப்பந்தத்தில் தி.மு.க. சங்கச்செயலாளர் சண்முகம் கையெழுத்திட்டதைக் கண்டித்து தொழிலாளர்கள் நேற்று காலை ஊர்வலமாக வந்து அவருடைய வீட்டின்முன் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

## இந்தோ சீனவிலிருந்து அமெரிக்கப்படை போகவேண்டும் சீனப் பிரதமர் அறைகூவல்

பீகிங், மார்ச் 24—

இந்தோசீனாவிலிருந்து அமெரிக்கப் படைகள் நிபந்தனையின்றி அடியோடு வெளியேற வேண்டும் என்று சீனப் பிரதமர் சூ-என்-லாய் கோரினார்.

கம்போடிய புரட்சி அரசு தோற்றுவிக்கப்பட்ட இரண்டாவது ஆண்டுவிழா வைபோகடி இங்கு நடந்த அளித்த விருந்தில் சூ-என்-லாய் பேசினார்.

கம்போடியாவில் விடுதலைப்படைகள் எதிரிக்கு தோல்விமேல் தோல்வி ஏற்படுத்தி வருவதையும் அவர் பாராட்டினார்.

# நடந்து முடிந்த தேர்தல் பற்றி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பொலிட்பீரோ அறிக்கை

கல்கத்தா, மார்ச் 25—

இந்திய கம்யூனிஸ்டு கட்சி (மார்க்சிஸ்ட்) அரசியல் தலைமைக்குழு சமீபத்தில் நடந்து முடிந்த தேர்தல்களின் எல்லா விபரங்களையும் பரிசீலனைசெய்து கீழ்வரும் அறிக்கையினை விடுத்துள்ளது.

எல்லா எதிர்க்கட்சிகளுக்கும் திருப்தி அளிக்கும் வகையில் சுதந்திரமான நேர்மையான தேர்தல் சூழ்நிலையை உருவாக்கி மேற்கு வங்கத்தில் உடனடியாக மறுதேர்தல் நடத்த வேண்டுமென்று மார்க்சிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக்குழு வேண்டுகிறது. இதன் முழுவிபரம் பின்னால் வெளியிடப்படும்.

காங்கிரஸ் ஆட்சியாளர்கள் புரிந்த மோசடிகளைப் பற்றியஎல்லா விபரங்களும் தந்தபின், இவைகள் மேல் மட்டத்தில் மத்திய அரசாங்கத்தை நடத்துவோர் உருவாக்கிய திட்டத்தின் அடிப்படையில் நடத்தி முடிக்கப்பட்டது என்று அரசியல் தலைமைக்குழுவின் அறிக்கை குற்றம் சாட்டியுள்ளது.

### சட்ட மன்றத்தில் கலந்து கொள்ளார்

இடதுசாரி முன்னணி வங்க சட்டமன்ற கூட்டத்தில் கலந்துகொள்ள வேண்டாமென்றும் வங்கத்தின் மோசடி சட்டசபையில் கலந்து கொள்ள வேண்டாமென்றும் அதில் புதிய இடதுசாரி முன்னணியினர் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டாமென்றும் மார்க்சிஸ்ட் கட்சியின் வங்க மாநிலக் குழுவும், இடதுசாரி முன்னணியும் செய்த முடிவை அரசியல் தலைமைக்குழு அங்கீகரித்தது.

பீகார் மாநிலத்தைப் பொறுத்த வரையில் ... மார்க்சிஸ்ட் கட்சியுடன் ... காங்கிரசை ... நல்ல வாய்ப்புகள் இருந்தும் வேறு ... தேர்தல் மோசடிகள் நடத்தப்பட்டுள்ளன.

காஷ்மீரைப் பொறுத்த வரையில் மக்கள் வாக்கெடுப்பு முன்னணி என்ற அமைப்பின் கொள்கைகளையும் நோக்கங்களையும் மார்க்சிஸ்ட் கட்சி நிராகரிக்கும் அதே சமயத்தில், அந்த அமைப்பின் உறுப்பினர்கள் தேர்தலில் கலந்துகொள்ள முடியாதபடி சகலவிதமான ஜனநாயக விரோத முறைகளையும் பின்பற்றினர்.

### வேட்புமனு நிராகரிப்பு

காங்கிரஸ் எதிர்ப்பு வேட்பாளர்களின் வேட்பு மனுக்கள் சரியான காரணமின்றி போதிய நிராகரிக்கப்பட்டன.

மேற்கு வங்கத்தில் தேர்தலுக்கு முன்பும் அதன் பின்னரும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்புள்ள சுமார் ... அவர்கள் குடும்பங்களுடன் தாங்கள் வாழ்ந்துவந்த இடங்களிலிருந்து வேறு இடங்களில் வாழவேண்டிய சூழ்நிலை ஆளும் காங்கிரசால் ஏற்படுத்தப்பட்டது.

இவ்வாறு தேர்தல் மோசடிகள் நடப்பதை எதிர்த்துப்போராடி முறியடிக்கப் படாவிட்டால் பார்லிமென்டரி ஜனநாயக அமைப்பு ஒரு முடிவுக்கு வரும்நாள் வெகு தூரத்தில் இல்லை.

### வலதுகம்யூனிஸ்ட் துரோகம்

காங்கிரசின் இத்தகைய அடாத ஜனநாயக விரோத செயல்களுக்கு வலது கம்யூனிஸ்ட் கட்சி முழு ஒத்துழைப்பு அளித்தது ...

வங்க தேசம் விடுதலைபெற இந்திராகாந்தி வகித்த பங்கின் காரணமாக காங்கிரஸ் கட்சிக்கு ஏற்பட்டுள்ள செல்வாக்கு மேற்கு வங்கத்தில் அது வெற்றிபெற்றதற்கு மட்டுமே காரணமாக கூறப்படுகிறது.

ஆனால் நடந்துமுடிந்த இத்தேர்தலின் விவரங்கள் இவ்வாறு உரிமை கொண்டாடுவது பொய்யென நிரூபிக்கிறது. வங்க தேச விடுதலைப் பிரச்சினையை நாணயமற்ற முறையில் தன்னலம் மற்றும் கட்சியின் நலனுக்காக ஆளும் காங்கிரஸ் முயற்சித்த போதும் 1971ல் காங்கிரஸ் பெற்ற வாக்குகளைவிட இத்தேர்தலில் பெற்ற வாக்குகள் பல இடங்களில் கணிசமாகக் குறைந்துள்ளன. அல்லது கிட்டத்தட்ட அதே அளவில் உள்ளன என்பதையே தேர்தல் விவரங்கள் எடுத்துக் கூறுகின்றன.

காங்கிரசுக்கு பலம் வாய்ந்த ராஜ்யங்கள் என்று கூறப்படும் ஆந்திரா மைசூர், ஹிமாசலப் பிரதேசம் அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களில் காங்கிரசுக்கு கிடைத்துள்ள வாக்குகள் முன்னைவிட கணிசமாகக் குறைந்துள்ளன.

காங்கிரசுக்கு எதிராக இடதுசாரி ஜனநாயகசக்திகள் மாற்று அரசு அமைக்கும் வாய்ப்புகள் உள்ள மேற்குவங்கத்தில்—காங்கிரசுக்கு கடந்த காலத்தில் மரண அடி கொடுத்துள்ள மேற்கு வங்கத்தில் 27.3 சதமானத்திலிருந்து நமது வாக்குகள் 49 4 சதவீதமாக உயர்ந்துள்ளன.

அரசியல் தலைமைக்குழு கூட்டத்தின் முழுவிவரங்கள் விரைவில் வெளிவரும்.




தி. மு. க. கூட்டணியுடனான உறவை ரத்து செய்து கொண்டோம்; இனிமேல் ஆளும் காங்கிரசுடன் கூட்டணி சேருவோம் என்று வலது கம்யூனிஸ்ட் கட்சி முடிவு செய்துள்ளது. — செய்தி

## 60 இலட்சம்

# மோசடி பற்றி விசாரணை இல்லை

புதுடெல்லி மார்ச் 24—

ஸ்டேட் பாங்கில் 60 லட்சம் மோசடி செய்ததாக கைது செய்யப்பட்ட நகர்வாலா திடீர் மரணம் அடைந்தது குறித்து மார்க்சிஸ்ட் கட்சியின் நடாளுமன்ற உறுப்பினர் தோழர் ஜோதிர்மாய்பாசு கவன ஈர்ப்புத் தீர்மானம் கொண்டு வந்தார்.

இந்த கவன ஈர்ப்புத் தீர்மானத்தை வழக்கத்திற்கு மாறுக முன்னறிவிப்பு இல்லாமலேயே நிராகரித்ததற்கு தோழர் ஜோதிர்மாய் பாசு கடும் எதிர்ப்பு தெரிவித்தார்.

நகர்வாலா மோசடி வழக்கை விசாரணை செய்து வந்த போலீஸ் அதிகாரி திரு. காஷ்யப் ஒருகார் விபத்தில் திடீர் மரணம் அடைந்தார்.

அதைத் தொடர்ந்து போலீஸ் காவலில் இருந்த நகர்வாலாவும் இறந்தது சந்தேகத்திற்கு இடமளிக்கும் வகையில் உள்ளது இதில் ஏதோ சதி நடந்துள்ளது என்று அவர் தெரிவித்தார்.

தோழர் ஜோதிர்மாய்பாசுவின் கவன ஈர்ப்புத் தீர்மானத்தின் மீது பல எதிர்க்கட்சி உறுப்பினர்கள் பேசினர். கவன ஈர்ப்புத் தீர்மானத்தை சபாநாயகர் நிராகரித்ததற்கு அவர்கள் கடும் எதிர்ப்பு தெரிவித்தனர்.

## மன்னார்குடியில்

# போலீஸ் இன்ஸ்பெக்டரின் அடக்குமுறை தர்பார்

மன்னார்குடி, மார்ச் 23-

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நிதியளிப்பு கூட்டம் 2-3-72-ம் தேதி பூந்தாழங்குடியில் நடைபெற்றது. இந்த கூட்டத்தில் கலந்து கொள்ள, புள்ளமங்கலம் தோழர் ஏ. அய்யாகண்ணு என்பவர் இளமங்கலம் என்றகிராமத்தின் வழியாக வரும்போது இளமங்கலம் தி.மு.க.வைச் சேர்ந்தவர்கள் என் மருதையன், கே. நாகராஜன் ஆகிய இருவரும் அய்யாகண்ணுவை வழி மறித்து அடித்து கத்தியால் குத்தினார்கள். குடிசை ஒன்றுக்கு தீ வைத்துக் கொளுத்தினார்கள்.

இந்த அக்கிரமத்தைச் செய்துவிட்டு தங்களைக் காப்பாற்றிக்கொள்ள போலீசில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் ஊழியர்கள் மீது பொய்யான புகார் கொடுத்துள்ளார்கள். இதை வைத்துக்கொண்டு திருவாரூர் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் எம். ஏ. சலீம் என்பவர் போலீஸ் லாரியுடன் புள்ளமங்கலம், வடவேற்குடி, மணக்கரை, சித்திரையூர், சிக்கவெளி ஆகிய கிராமங்களுக்குச் சென்று ஆண்களையும் பெண்களையும் பயமுறுத்தியும் கீழ்த்தரமாகத் திட்டியும். அடித்தும் வழக்கு ஒன்றைப் பதிவுசெய்து, அந்த கேசில் சம்பந்தப்படுத்தி வட்ட ம. தலைவர் தோழர் கே. ராசுபிள்ளை, தாலுகா தொழிற் சங்க உறுப்பினர் கே. பெரியசாமி கட்சி உறுப்பினர் புலிதேவர், ராஜமாணிக்கம் ஆகியவர்களை கைதுசெய்து சிறையிலடைத்துள்ளார்.

மார்க்சிஸ்ட் தோழர்கள் நால்வரும் சிறையிலடைக்கப்பட்டு நிபந்தனையில்ஜாமீனில் வெளிவந்துள்ளார்கள். நீதிமன்றம் தினசரி இருமுறை அஞ்சல் போலீஸ் ஸ்டேஷனில் கையொப்பமிட உத்திரவிட்டுள்ளது. தி.மு.க.வினரால் தாக்கி படுகாயத்துடன் இருக்கும் தோழர் ஏ. அய்யாகண்ணு இன்னும் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகிறார். அய்யாகண்ணு கொடுத்துள்ள புகார் மீது இன்று வரை எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

### சர்க்கிள் இன்ஸ்பெக்டர் சலீமின் அடாத செயலும், அட்டகாசமும்

சர்க்கிள் இன்ஸ்பெக்டர் தி.மு.க. ரவுடிகளுடன் வடவேற்குடி சென்று பி. அருணாசலம் என்ற தோழரை அடியோ அடி என்று அடித்து காலை ஒடித்து நொறுக்கினார்கள். அருணாசலமும் மன்னை மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுள்ளார். இது சம்பந்தமாகவும் "தீக்கதிரில்" முன்பு எழுதப்பட்டு அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டு சென்றும் இந்த அதிகாரி மீதும், தி.மு.க. ரவுடிகள் மீதும் இன்று வரை எந்த நடவடிக்கையும் இல்லை.

### தி.மு.க. ரவுடிகளின் கைவரிசை

சித்திரையூரில் மார்க்சிஸ்ட் தோழர் நய்னான் என்பவர் அவ்வூர்

(4-ம் பக்கம் பார்க்க)

# திரிபுரா-பங்களா தேச எல்லையில் போலீஸ் ஊழல்

## நாடாளுமன்றத்தில் பிரேன்தத்தா குற்றச்சாட்டு

புதுடில்லி மார்ச் 23—

நாடாளுமன்றத்தில் பட்ஜெட் உபமானியக் கோரிக்கைமீது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினரான தோழர் பிரேன் தத்தா மார்ச் 15-ந் தேதி ஆற்றிய உரையினைக் கீழே தருகிறோம்.

உபமானியக் கோரிக்கை மீது நான் பேசும்போது தேர்தல் சமயத்தில் பிரதம மந்திரியும் மற்ற அமைச்சர்களும் மேற்கொண்டிருக்கும் செலவை இந்தச் சபையின் கவனத்துக்குக் கொண்டு வர நான் விரும்புகிறேன். என்னுடைய மாநிலத்தில் சித்தார்த்த சங்கர் ரேயும் மற்ற அமைச்சர்களும், அமைச்சர்கள் என்ற முறையில் பணம் செலவு செய்து தேர்தல் இயக்கத்தை நடத்தினார்கள் இதற்குப் பிறகும் ஜனாதிபதி இந்தியாவில் பாரபட்சமற்ற தேர்தல் நடை பெற்றிருப்பதாகக் கூறியதைப் பற்றி நான் ஆச்சரியமடைகிறேன்.

### 2 லட்சம் பேர் அகற்றப்பட்டனர்

"உபமானியக்கோரிக்கைகளின் ஒரு அம்சத்தின் மீது நான் பாதுகாப்பு அமைச்சரின் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன். பங்களா தேசப் போராட்டத்தின் போது திரிபுரா பூராவும் முற்றுகையிடப்பட்டு அங்குள்ள மக்கள் தாங்கொணாத் துயருக்கு உட்பட்டார்கள் அநேகமாக பகுதிகள் பூராவிலும் மக்கள் இடம் பெயர்ந்தனர். பாதுகாப்புக்காக அங்குள்ள குடிசைகள் காலி செய்யப்பட்டன அங்கு பாதுகாப்பு அகழிகள் வெட்டப்பட்டன சுமார் இரண்டு லட்சம் மக்கள் எல்லைப்பகுதிகளிலிருந்து அகற்றப்பட்டனர். துரதிருஷ்டவசமாக தற்காலிக அகதிகளாகக் கருதி இந்த மக்களுக்கு அரசு எந்த உதவியோ, நிவாரணமோ அளிக்கவில்லை.

சபாநாயகர்: நீங்கள் எந்தக் கோரிக்கையின் மீது பேசுகிறீர்கள்.

தத்தா: பாதுகாப்பு பற்றிய மானியக்கோரிக்கை மீதும் ஒதுக்கீடுகள் மீதும் நான் பேசுகிறேன்

நான் அரசாங்கத்தின் கவனத்தை ஒருபிரச்னையின் மீது இழுக்கவிரும்புகிறேன்

### இரயில் பாதை இணைப்பு

திரிபுரா, மணிபூருக்கு அனுமதிக்கப்படுவதென்ற தலைப்பின் கீழ் ஒரு செலவினம் சேர்க்கப்பட்டுள்ளது. திரிபுரா புதிய மாநிலமாக அமைக்கப்பட்டுள்ளது திரிபுரா மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது தற்போது அங்கு ரயில்பாதை இணைப்பு கிடையாது. சிலகார் பகுதியில ரயில் பாதை அமைக்க சிறது மானியம் அளிக்கவேண்டும் பங்களா தேச ரயில் பாதையையும் நம்முடைய அரசின் உதவியுடன் இணைத்து விட்டால் இயற்கை வயு, எண்ணெய் தோண்டி எடுத்தலைத் துரிதப்படுத்த முடியும்.

திரிபுர வின் எல்லைப்பாதுகாப்பு போலீசுக்கும், மத்திய போலீசுக்கும் மானியக் கோரிக்கை கேட்கப்பட்டுள்ளது

நாம்வங்காளதேசத்துடன் நட்புறவோடு இருக்கிறோம் எல்லைப் பகுதியில் இருபுறமும் ஓரளவு மக்கள் வர்த்தகம் செய்கிறார்கள் இருபுறமும் சில கச்சாப் பொருள்களை வாங்கவும் விற்கவும் தாராளமாக அனுமதிக்கப்படுவதாகச் செய்திகள் கூறுகின்றன

### காவல் படையினர் வாங்கும் லஞ்சம்

ஆனால் எல்லைப் பாதுகாப்பு படை, வியாபாரிகளிடமிருந்து லஞ்சம் வாங்குகிறது இந்தப் பழக்கம் நீடித்தால் இவ்விரு நாடுகளுக்கும் இடையே நல்லுறவு பாதிக்கப்படும்

பங்களா தேசத்திற்கு, வீடு கட்டும் பொருள்களை, நமது காடுகளிலிருந்து அனுப்ப எந்தவிதமான தடையும் இருக்கக்கூடாது என்று திட்டமான அரசாங்க உத்திரவு இருக்கிறது இதற்குச் சட்டப் பூர்வமான தடையும் இல்லை ஆனால் போலீஸ், சி. ஆர் பி., எல்லைப்பாதுகாப்புப்படை ஆகியவை பொருள்களை விற்கும் வாங்கும் இருபகுதி மக்களிடமிருந்தும் பணத்தைப் பறிக்கிறார்கள். இது அந்தப் பகுதி நாடாளுமன்ற உறுப்பினர்களாலும் என் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டது அரசு இது பற்றி நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கூறினார்.

# வங்க சட்ட மன்றக் கூட்டம் இடதுசாரிமுன்னணிபகிஷ்கரிப்பு

கல்கத்தா, மார்ச் 25—

மோசடித் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்ட வங்க சட்டசபை இன்று கூடியது. அபூர்வலால் மஜூம்தார் என்ற முன்னாள் பார்வார்ட் பிளாக் உறுப்பினரை காங்கிரஸ் காரர்கள் சபாநாயகராகத் தேர்ந்தெடுத்தார்கள்.

தங்கள் ஆதரவுடன் தேர்தலில் வெற்றிபெற்ற இவரை சுயேச்சை மனிதர் என்று வேறு சொல்லிக் கொண்டனர்

காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த அரிதாஸ் மித்திரா உதவி சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்த பதவிகூட ஐயோ. பாவம் வலது கம்யூனிஸ்ட் கட்சிக்குக் கிடைக்கவில்லை.

### எதிர்கட்சி இல்லை

இந்த சட்டசபை கூட்டத்திற்கு இடதுசாரி ஐக்கிய முன்னணியைச் சேர்ந்த 20 உறுப்பினர்களும் முஸ்லீம் லீகைச் சேர்ந்த ஒரு உறுப்பினரும் வரவில்லை எதிர்கட்சி என்று சொல்லிக் கொள்ள ஸ்தாபன காங்கிரஸைச் சேர்ந்த ஒரே ஒரு உறுப்பினரும். இரு கூர்கா லீக் உறுப்பினரும் வந்திருந்தனர்.

இந்த லட்சணத்தில் வராத எதிர்க்கட்சிகளின் உரிமைகளை தான் பயபக்தியுடன் பாதுகாக்கப் போவதாக சபாநாயகர் அறிவித்தார்.

முதலமைச்சரும், சபாநாயகரும் ஏனையோரும் தாங்கள் மோசடித் தேர்தலில் வெற்றி பெற்ற உண்மையை மூடி மறைக்க இடதுசாரிமுன்னணி சட்டமன்றத்தை பகிஷ்கரிக்காமல் மீண்டும் வந்துவிட வேண்டும் என்று வேண்டுகோள் விடுக்கொண்டே இருக்கிறார்கள்.

# சிலி நாடாளுமன்ற கூட்டம் தள்ளிவைப்பு அதிபர் அலெண்டி உத்திரவு

சாண்டியாகோ மார்ச், 24—

சிலி நாட்டின் அதிபர் அலெண்டி, நாடாளுமன்றத்தின் இரு சபை கூட்டங்களையும் செவ்வாய்க்கிழமை வரை நிறுத்திவைக்க உத்தரவிட்டார்.

பிரதான எதிர்க் கட்சியான கிறிஸ்தவ ஜனநாயகக் கட்சி தலைவர்களுடன் பேச்சு நடத்துவதற்கு உதவும் முறையில இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதாக நீதித் துறை காரிய தரிசி கூறினார்.

இதற்கிடையே விவசாயிகள் நிலத்தைக் கைப்பற்றியது சட்டவிரோதம் என்று சுப்ரீம் கோர்ட் அறிவித்தது

உடனடியாக நடவடிக்கை எடுக்கக் கோரியது பற்றி அதிபர் அலெண்டி ஆராய்ந்து வருவதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

# 309 மாணவிகள் தவிப்பு

சேலம் மார்ச். 24—

சேலம் சாரதா மகளிர் கல்லூரியில் செலக்ஷன் தேர்வு காரணமாக 309 மாணவிகள் பொது தேர்வு எழுத அனுமதிக்கப்படாமல் நிறுத்தப்பட்டுள்ளனர்

இது குறித்து சட்ட மன்றத்தில தி.மு.க. உறுப்பினர் ஆறுமுகம் கவன ஈர்ப்புத் தீர்மானம் ஒன்றைக்கொண்டு வந்தார்.

தனியார் கல்லூரியில் செலக்சன் தேர்வு பற்றி முடிவெடுப்பது அந்தக் கல்லூரி, பல்கலைக்கழகம் ஆகியவற்றைப்பொறுத்தது என்றும் அதில் அரசுக்குப் பொறுப்பு எதுவும் இல்லை என்றும் கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் பதில் கூறியுள்ளார்.

# தீக்கதிர்

## நேர்மையாக மறுதேர்தல் நடத்துக

வங்கத்திலும் இன்னும் சில மாநிலங்களிலும் நடந்த தேர்தல் மோசடிகளைப்பற்றி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மட்டுமல்ல, ஏனைய பல எதிர்க் கட்சிகளும் தம் கண்டனக் குரலை எழுப்பியுள்ளன.

பீகார் சட்டசபையில் சோஷலிஸ்ட் கட்சியும், ஸ்தாபன காங்கிரசும் பீகாரில் மோசடித் தேர்தலுக்கு ஊக்கமளித்த கவர்னருடைய உரையைப் பகிஷ்கரித்து வெளிநடப்புச் செய்தனர்.

ஸ்தாபன காங்கிரசின் அகில இந்திய காரியக் கமிட்டியே ஆளும் காங்கிரசின் பாசிஸ்ட் நடைமுறைகள் பற்றி வன்மையான கண்டன முழக்கம் செய்துள்ளது.

"பல பகுதிகளிலிருந்து கிடைத்த தகவல்கள் எல்லாக்கட்சிகளுக்கும் சம சந்தர்ப்பம் கிட்டாதவாறு ஆளும் கட்சி திட்டவட்டமான முயற்சி செய்திருப்பதையும் தேர்தலின் முடிவுகளைத் தீர்மானிப்பதற்கு நிர்வாக யந்திரம் பயன்படுத்தப் பட்டிருப்பதையும் காட்டுகிறது"

இவ்வாறு ஸ்தாபன காங்கிரஸ் காரியக் கமிட்டி கருத்து அறிவித்ததுடன், மேலும் குறிப்பிடுவதாவது:

"தங்களுடைய வெற்றியை உறுதிப்படுத்துவதற்கு எங்கெல்லாம் அத்தியாவசியம் என்று கருதப்பட்டதோ, அங்கெல்லாம் போலீசையும் அரசாங்க அமைப்பையும் ஆளும் கட்சி பயன்படுத்திக்கொள்ளத் தயங்கவில்லை. சில பகுதிகளில் வேண்டுமென்றே ஏராளமான ஓட்டர்கள் வாக்காளர் பட்டியலிலிருந்து நீக்கப்பட்டதாகத் தகவல்கள் வந்துள்ளன. வாக்குச்சாவடிகளை ஆளும் கட்சியின் ஆயுதமேந்திய நபர்கள் கைப்பற்றியதும் வாக்காளர்களை மிரட்டியதும் எதிர்க்கட்சி வேட்பாளர்களின் வாகனங்களைக் கைப்பற்றியதும், போலீசையும், குறிப்பாக, சி. ஆர். பி. யையும் ஆளும் கட்சிக்காக வாக்குச் சாவடிகளைக் கைப்பற்றப் பயன் படுத்தியதும், நிர்ப்பந்தமாக ஓட்டுகளை செல்வாததாக்கியதும், ஆளும் கட்சிக்கு ஆதரவாக செயல்படுமாறு தேர்தல் அதிகாரிகள் நிர்ப்பந்திக்கப்பட்டதும் மக்கள் அபிப்பிராயத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக வாக்குப் பெட்டி இருக்கமுடியாது என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளது."

(ஹிந்து மார்ச் 24.)

ஸ்தாபனக் காங்கிரசின் அரசியலுக்கும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியலுக்கும் அடிப்படையான வேறுபாடு இருந்தபோதிலும், ஆளும் காங்கிரசை எதிர்த்த ஒரு எதிர்க்கட்சி என்ற முறையில் தன்னுடைய சொந்த அனுபவத்தின் அடிப்படையில் ஆளும் காங்கிரசின் பாசிச வெறியாட்டத்தையும் மோசடித் தேர்தலையும் தயக்கமின்றி எடுத்துக் கூறியதை வரவேற்கிறோம்.

ஆளும் காங்கிரசின் தேர்தல் மோசடிகள் பரவலாகப் பல இடங்களில் செய்யப்பட்டபோதிலும், எதிர்க்கட்சிகள் பதவிக்கு வரும் வாய்ப்புள்ள வங்கம், பீகார் போன்ற இடங்களில் ராஜ்ய முழுமையிலும் திட்டமிட்டு மோசடிகள் செய்யப்பட்டுள்ளன.

மேற்கு வங்கத்தைப் பொறுத்தவரையில் அப்பட்டமான பாசிச வெறித்தாக்குதல்கள் மூலம் காங்கிரஸ் வெற்றி பெற்றது. ஆயுதந் தாங்கிய காங்கிரஸ் குண்டர்கள் பெரும்பாலான தொகுதிகளில் வாக்குச்சாவடிகளைக் கைப்பற்றியே வாக்குச்சீட்டுகளை அதிகாரிகளிடமிருந்து பறித்து முத்திரையிட்டுள்ளனர்; பல இடங்களில் அதிகாரிகளே இதற்கு உடந்தையாக இருந்துள்ளனர். இதன் விபரங்களை இதே இதழில் தோழர் ஜோதிபாசு எழுதிய கடிதத்தில் காணவும்.

இந்த நிலைமையில் மேற்கு வங்கத்தில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு ஆட்சி பதவியில் அமர்ந்திருக்கிறது என்பதற்கு எவ்வித நேர்மையான ஆதாரமுமே இல்லை.

தான் பாஸிஸ்டு அல்ல, ஜனநாயக வாதிதான் என்று இந்திரா காந்தி பேசுவதில் கடுகளவேனும் உண்மையிருக்குமானால், மேற்குவங்கத்தின் 'மோசடி'ச் சட்டசபையை உடனே கலைக்கவேண்டும். நேர்மையாக — எதிர்க் கட்சியினர் குறைகூறுவதற்கு இடமில்லாதவகையில் மீண்டும் தேர்தல் நடத்தவேண்டும்.

## கல்கத்தா மாநகராட்சிக் கலைப்பு

ஆளும் காங்கிரஸ் வசமிருந்த கல்கத்தா மாநகராட்சி கலைக்கப்பட்டுவிட்டது. ஆளும்காங்கிரஸ் வலது கம்யூனிஸ்ட், பார்வார்டு பிளாக் ஆகிய கட்சிகளின் கூட்டணி கல்கத்தா மாநகராட்சியை இதுவரை நடத்தி வந்தது.

ஆனால் இப்பொழுது பார்வார்டு பிளாக் போன்ற மற்ற கட்சிகள், இடதுசாரி ஐக்கிய அணியில் சேர்ந்து தேர்தலில் காங்கிரசுக்கெதிராக செயல்பட்டன. இதன் தொடர்ச்சியாக நகரசபையிலும், பார்வார்டுபிளாக்கட்சி, இதுவரை தான் காங்கிரசுக்கு அளித்து வந்த ஆதரவை நீக்கிக்கொண்டது. ஆகவே ஆளும் காங்கிரசின் பலம் மாநகராட்சியில் குறைந்தது.

"நேர்மையாக மாநகராட்சியின் நிர்வாகத்தை எதிர்க்கட்சிகளிடம் ஒப்படைக்காமல் தன்னுடைய சர்வ திகாரத்தைப் பயன்படுத்தி மாநகராட்சியையே கலைத்துள்ள சித்தார்த்த சங்கர்ரேயின் ஆட்சி ஜனநாயக விரோத வழியில் பதவிக்கு வந்த இந்த ஆட்சி, ஜனநாயக விரோத பாசிஸத் தாக்குதலை அது பதவியில் அமர்ந்தவுடனேயே தொடுத்துள்ளது. பலாத்கார வழியில் வெற்றி பெற்றுவிட்டோம்; கல்கத்தா மாநகராட்சியை மீண்டும் கலைத்து மோசடித் தேர்தல் மூலம் கைப்பற்றலாம் என நினைத்து 1975-ம் வருடம் பதவியிலிருக்க உரிமையுள்ளவரை மாநகராட்சியைக் கலைத்துவிட்டனர். இவர்கள்தாம் ஜனநாயக முறையில் தேர்தல் நடத்துவதாகவும், ஜனநாயகத்திற்கு எதிராக எதையும் செய்யமாட்டோம் எனவும் கூறுகின்றனர்.

பாசிஸப் பேயாட்டியின் இரண்டாவது கட்டமே கல்கத்தா மாநகராட்சிக் கலைப்பு. இந்த அடாத செயலை எதிர்த்து மேற்கு வங்க மக்கள் மட்டுமல்ல, ஜனநாயகத்தில் நம்பிக்கையுள்ள அனைவரும் தம் கண்டனக் குரலை எழுப்பவேண்டும்.

# சிலி நாட்டில் அமெரிக்க சதி வேலைகள் அம்பலம்

வாஷிங்டன், மார்ச் 24—

அமெரிக்கா, பிறநாடுகளுடைய அரசியலில் தலையிடுகின்றதா என்பதைப் பற்றி விரிவான விசாரணை நடத்துவதற்கு அமெரிக்க செனட் சபையின் வெளியுறவு கமிட்டி தீர்மானித்திருக்கிறது. சிலிநாட்டில் அமெரிக்க உளவுஸ்தாபனம் (சி ஐ ஏ) தலையிட்டுள்ளது என்ற புகார் எழுந்துள்ளதால் அதுகுறித்துவிசாரிக்க செனட் சபை முடிவு செய்தது.

### ஜாக்ஆண்டர்சன் அம்பலப்படுத்தும் தகவல்

தென்அமெரிக்காவில் உள்ள சிலி நாட்டில், வலதுசாரி ராணுவப்புரட்சியை ஏற்படுத்தி இடதுசாரித் தலைவர் ஜனாதிபதி அலெண்டேயைக் கவிழ்க்க முயற்சி செய்தனர். இந்த முயற்சியில் அமெரிக்க கம்பெனியாகிய 'ஐ டி டி'' க்கு பெரும் தொடர்பு உள்ளதாக அமெரிக்க பத்திரிகையாளர் ஜாக் ஆண்டர்சன் (இந்தியா - பாகிஸ்தான் போரில் வெள்ளை மாளிகையின் ரகசிய செய்திகளை வெளியிடவர்) கூறியுள்ளார். இது சில ரகசிய தஸ்தாவேஜுகள் மூலம் தெரிய வந்துள்ளது.

### அமெரிக்க உளவு ஸ்தாபனத்திற்கு 'சமன்'

சிலிநாட்டின் வலதுசாரி ராணுவப் புரட்சிக்கு காரணமாயிருந்த ஐ. டி. டி. கம்பெனியைச் சேர்ந்த ஊழியர்களை விசாரிப்பதற்கு "சம்மன்" அனுப்பவும். மேலும் இந்த சதி வேலையில் அமெரிக்க உளவுஸ்தாபனமும் (சி ஐ ஏ) எவ்வாறு சம்பந்தப் பட்டிருக்கிறது என்பதை ஆராயவும் விசேஷ ஊழியர்கள் அடங்கிய குழுவை ஏற்படுத்தும் என்று அறிவிக்கப்படுகிறது.

செனட்சபையின் கூட்டம் சுமார் ஒன்றரைமணி நேரம் நடைபெற்றது. இதில் அமெரிக்க வெளியுறவு அமைச்சர் வில்லியம் ரோஜர்சும் கலந்து கொண்டார். சுதந்திரமான போட்டி வர்த்தகம் நல்லதென்றும், அமெரிக்க கம்பெனிகளால் வெளிநாடுகளில் நல்ல காரியங்களே செயல் பட்டு வருகின்றன எனவும் கூறியுள்ளார். ஆகவே சி ஐ ஏ (ஐ டி டி.) கம்பெனிகளின் மீது விசாரணை தேவையில்லை என்றார்.

### ஜனநாயகக் கட்சி உறுப்பினர் தாக்கு

அமெரிக்க வெளியுறவு கொள்கைகள் என்பது பெரிய அமெரிக்க கம்பெனிகளின் நலனை ஆதாரமாகக் கொண்டவை என ஜனநாயக கட்சியைச் சேர்ந்த ஃபிராங்க் சர்ச் கூறியுள்ளார். மேலும், ஆண்டர்சன் அம்பலப் படுத்திய தகவல்கள் உண்மையென்றால் சம்பந்தப்பட்டவர்களின் மீது நடவடிக்கை எடுக்கவேண்டுமென இந்த ஜனநாயக கட்சி உறுப்பினர் வற்புறுத்தியுள்ளார்.

சிலிநாட்டிலுள்ள ஷெராடன் ஆடம்பர ஹோட்டலையும், தந்தி, தொலைபேசி வளர்ச்சி திட்டங்களையும் உருவாக்கியதில் 'ஐ டி டி', கம்பெனி ஆதிக்கம் செலுத்தியது. சாக்கொளையடித்த 9·5 கோடி டாலர் பணத்தைப் பயன்படுத்தியது. முன்னாள் அமெரிக்க மத்திய உளவு ஸ்தாபனத்தின் தலைவராக இருந்து இப்போது 'ஐ டி டி." யின் தலைவராக இருக்கும் ஜான் மக்கோன் என்பவருக்கும் இதில் சம்பந்தம் இருக்கும் எனக் கூறப்படுகிறது.

சிலி நாட்டின் விஷயத்தில் அமெரிக்க உளவு ஸ்தாபனம் சம்பந்தப்பட்டிருப்பதையும். இதில் ஜான்மக்கோன் போன்றவர்கள் சம்பந்தப் பட்டிருப்பதையும் உடனே ஆராய வேண்டுமென அமெரிக்க சட்டசபை வெளியுறவுக் கமிட்டியும், செனட்வெளியுறவுக்கமிட்டியும் வற்புறுத்தியுள்ளன.

### இத்தாலியில்

## 70 லட்சம் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம்

ரோம், மார்ச். 23—

இத்தாலி நாட்டில் 70 லட்சம் விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களும் 21-ம் தேதியன்று பிரும்மாண்டமான அளவில் வேலை நிறுத்தம் செய்தனர்.

இத்தாலி நாட்டில் விவசாயத் தொழிலாளர்கள் 13 சத விகிதம் சம்பள உயர்வு கோரி போராடுகிறார்கள் சுமார் 17லட்சம் விவசாயத் தொழிலாளர்கள் 21-ம் தேதி வேலை நிறுத்தம் செய்தனர்.

தங்களது சகோதர வர்க்கத்தினரான விவசாயத் தொழிலாளர்களுக்கு ஆதரவாக தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களும் அன்று வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டனர்.

மொத்தத்தில் 70 லட்சம் பேர் வேலைநிறுத்தம் செய்தனர்.

## மாடக்குளம் பேரூராட்சி மன்ற தொழிலாளர் கோரிக்கை வெற்றி

மதுரை மார்ச். 22—

மாடக்குளம் பேரூராட்சி அலுவலக ஊழியர்களின் நீண்டநாள் கோரிக்கைகளான மெடிகல் லீவு, பிரசவ லீவு, பொது விடுமுறை உள்பட பல கோரிக்கைகளை பேரூராட்சி நிர்வாகம் ஏற்றுக்கொண்டது.

மார்ச் 3-ந்தேதியன்று பேரூராட்சி அலுவலகத்தில் தொழிலாளர்களின் கோரிக்கைகள் சம்பந்தமான பேச்சுவார்த்தை நடைபெற்றது நிர்வாகத்தின்சார்பில் பேரூராட்சித் தலைவர் திரு சத்தியமூர்த்தி நிர்வாக அதிகாரி திரு வீ சுப்ரமணியம் ஆகியோரும், தொழிலாளர்கள் சார்பில், மதுரை வட்ட ஊராட்சி மன்றத் தொழிலாளர் சங்கத் தலைவர் வி. கே. பழனி, செயலாளர் தோழர் எஸ். ராமு ஆகியோரும் கலந்து கொண்டு பேச்சுவார்த்தை நடத்தியதில் ஒப்பந்தம் ஏற்பட்டது.

### பிரசவ லீவு

1. பேரூராட்சியில் வேலை செய்யும் பெண் தொழிலாளர்களுக்கு முழு சம்பளத்துடன் இரண்டு மாத பிரசவ லீவ் வழங்கப்படும்.

2. பேரூராட்சியில் வேலை செய்யும் துப்புரவு தொழிலாளர்கள் அனைவருக்கும் ஒரு மாத மெடிக்கல் லீவ் முழுச் சம்பளத்துடன் வழங்கப்படும்.

3. அரசு விடுமுறைகள் அப்படியே அமுல் படுத்தப்படும்.

4. தொழிலாளர்கள் அனைவருக்கும் போனஸ் பண்டு கணக்கு வைக்கபடும் இது வரை கணக்குஇல்லாதவர்களுக்கு உடனடியாக கணக்கு துவக்கப்படும்.

5. போனஸ் பண்டு 50-பைசாபிடிக்கப்படுவதை கூடுதலாக பிடிக்க ஏற்றுக் கொள்ளப்பட்டது.

### காலனிகள்

6. தொழிலாளர்களுக்கு 31-3-72 க்குள் காலனிகள் வழங்குவது என்று ஏற்றுக் கொள்ளப்பட்டது.

7. 1967-ம் வருடம் தொழிலாளர்களுக்கு கிடைத்த சம்பள உயர்வு ஒரு பகுதி தொழிலாளர்களுக்கு இதுவரை கிடைக்காததை சட்டப்படி நடவடிக்கையெடுத்துகொள்வது

8. வேலை நீக்கம் செய்யப்பட்ட துப்புரவு தொழிலாளி பாண்டிசம்பந்தமாக சட்டப்படி நடவடிக்கைஎடுத்துகொள்வது

### எண்ணை, சோப்

9. துப்புரவு தொழிலாளர்களுக்கு எண்ணை, சோப்பு வழங்க வேண்டுமென வற்புறுத்தியதின் பேரில் பேரூராட்சி கூட்டத்தில் நிறைவேற்றுவதாகவும்.

10. தொழிலாளர்களுக்கு குடியிருப்பு அமைக்க விரைவாக நடவடிக்கை எடுப்பதாகவும் வாக்குறுதி அளித்தார்கள். இதற்கு சங்கம் ஒத்துழைப்பு தர வேண்டுமென்றுபேரூராட்சி தலைவர் கேட்டுக் கொண்டார்.

இந்த ஒப்பந்தம் மதுரை வட்டத்தில் உள்ள ஊராட்சி மன்றத் தொழிலாளர்கள் மத்தியில் உற்சாகத்தையும் உறுதியையும் ஏற்படுத்தியுள்ளது.

## ஆசிரியருக்கு...

### தாம் பணியாற்றும் கிராமத்தில் கர்ணம் குடியிருக்க வேண்டும்

ஐயா,

திருச்சி மாவட்டம் திராம்பாளையம். தில்லாம்பட்டி, பாமையூர். பாரர் கொட்டம் வெள்ளக்குளம் ஆகிய கிராமங்களுக்கு கிராமக்கர்ணம்இருக்கிறார். ஆனால் அவர் வெளியூரில் குடியிருக்கிறார்.

இதனால் அக் கிராமமக்களுக்கு பெருத்த சிரமம் ஏற்படுகிறது. நிலம் எழுதவும், மற்றகாரியங்களுக்கும் கர்ணத்தை அணுகவேண்டுமானால் கோவத்தக்குடி என்ற கிராமத்திற்குச் செல்ல வேண்டியிருக்கிறது.

கோவத்தக்குடி, எங்கள் ஊரிலிருந்து 3-4 மைல் தூரத்தில் உள்ளது. இதனால் வீண் அலைச்சல் மட்டுமல்லாது நேரமும் வீணாகிறது. அலைச்சலானாலும் நேரம் வீணானாலும் பரவாயில்லை என்றெண்ணி கோவத்தக்குடி சென்றால் அங்கும் கர்ணம் தமதுவீட்டில் அதிகமா இருப்பதில்லை என்று கூறி பொதுமக்கள் வருந்துகின்றனர்.

இம்மாதிரியான நிலைமை நீண்டகாலமாகவே இருந்து வருகிறது.

எனவே, அந்தக் கர்ணத்தைத், தாம் பணியாற்றும் கிராமத்திலேயே வசிக்கும் படியாகச் செய்து பொதுமக்களின் வீண்சிரமத்தை அகற்றுவதற்குத் தேவையான நடவடிக்கைகளைமேற் கொள்ள வேண்டும்.

இப்படிக்கு,

செ முத்தையா,
திராம்பாளையம்
திருச்சி மாவட்டம்

### சென்னை, செங்கை மாவட்டங்களில்

## ஜனநாயக பாதுகாப்பு பொதுக்கூட்டங்கள்

சென்னை, மார்ச். 23—

மத்திய—மாநில அரசுகளின் அடக்குமுறையைக் கண்டிப்பதற்காகவும் ஜனநாயக உரிமைகளைக் காப்பதற்காகவும் பிப் 27முதல் மார்ச் 12 வரை சென்னை, செங்கல்பட்டு மாவட்டங்களில் விரிவான இயக்கம் நடைபெற்றது.

முக்கியமான பகுதிகளில் நடைபெற்ற 17 கூட்டங்களில் ஆயிரக்கணக்கான மக்கள் கூடினர்.

பிப். 27—ல்திருவொற்றியூரில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர் என். சங்கரய்யா பேசினார். தொடர்ந்துவண்ணையம்பதி அனகாபுத்தூர், வடபழனி நந்தனம், தாம்பரம் முதலியஇடங்களில்கூட்டங்கள் நடைபெற்றன

இந்தக் கூட்டங்களில் தோழர்கள் வி. பி சிந்தன் பி ஆர் பரமேஸ்வரன், அரிபட், கே எஸ், பார்த்தசாரதி மைதிலிசிவராமன், சிவாஜி முதலானோர் பேசினர்.

மார்ச் 7ம்தேதி நந்தனத்தில் நடைபெற்ற கூட்டத்தில் வி பி சிந்தன் மாணவர்-ஜெயராமன், சௌந்தரராஜன், அமிர்தராஜ், ஜி. சி. ராதகிருஷ்ணன் ஆகியோர் பேசினர்.

மார்ச் 8ம்தேதியிலிருந்து 12ம் தேதி வரை எண்ணூர் திருவள்ளுவர், செம்பியம், காஞ்சிபுரம், ஆலந்தூர், மீஞ்சூர் பெரம்பூர் முதலிய இடங்களில் பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன.

தோழர்கள் உமாநாத், வி பி. சிந்தன் சி. கே. மாதவன், சி. கே மாணிக்கம் முதலானோர் பேசினர்.

### ஆத்தூரில்

ஆத்தூர், மார்ச். 23—

ஜனநாயக பாதுகாப்பு வாரம் ஆத்தூரில் மார்ச் 15-ல் தோழர் கே. சதாசிவம் தலைமையில் நடைபெற்றது தோழர்கள் கே. எஸ் அர்த்தனாரி, பி. ராஜூ ஏ பி. நாராயணன், ஆர். பி. ராமசாமி, மற்றும் பலர் பேசினர்.

### சமுகுமலை பொதுத் தொழிலாளர் சங்கம்

சமுகுமலை

மார்ச் 24 -

இங்கு பொதுத் தொழிலாளர் சங்கக் கிளைக்கு 1972 — 73-ம் ஆண்டுக்கான நிர்வாகக்குழுதேர்வுக் கூட்டம் 19-ம் தேதியன்று நடைபெற்றது தோழர் எம செல்லையா தலைமை வகித்தார்.

சங்கத்திற்கு தலைவராக தோழர் டி ராஜேந்திரனும் செயலாளராக எம். செல்லையாவும், பொருளாளராக கணேசன், ஆகியோர் தேர்ந்தெடுக்கப் பட்டனர். மாவட்டக் குழு உறுப்பினர்களாக எம். செல்லையாவும் எஸ். முனிசாமியும், தேர்ந்தெடுக்கப் பட்டனர் மற்றும் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக 7 பேர் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

போராடி வெற்றி பெற்ற பஞ்சாலை தொழிலாளர்களுக்கு இக்கூட்டத்தில் பாராட்டுத் தெரிவிக்கப்பட்டது.

மேற்கு வங்கத்தேர்தலில் ஆளுங் காங்கிரஸ் நடத்திய அடக்கு முறையையும் மோசடித்தேர்தலையும் கண்டனம் செய்து தீர்மானமும் நிறைவேற்றப் பட்டது.

### விவசாயிகளிடம் கடன் வசூல் கெடுபிடி

### இராமநாதபுரம் கலெக்டருக்கு மனு

கல்லமநாயக்கர், பட்டி.

மார்ச். 23—

இராமநாதபுரம் கல்லமநாயக்கர்பட்டி விவசாயிகள் பேரவைக்கூட்டம் அண்மையில் நடைபெற்றது.

இவ்வாண்டு மகசூல் பாதிக்கப் பட்டிருப்பதால் விவசாயிகள் கடன் செலுத்த முடியாமல் இருப்பதாகவும் இந்நிலையில் அதிகாரிகளின் கெடுபிடி வசூலை நிறுத்த வேண்டும் என்று அரசைக் கேட்டுக் கொண்டும் சட்டத்தில் தீர்மானம் இயற்றப்பட்டது.

இந்தத் தீர்மானத்தின் அடிப்படையில் மாவட்டக் கலெக்டருக்கு மனு ஒன்று அனுப்பப்பட்டுள்ளது.

## தீக்கதிருக்கு

### செய்திகடிதங்கள் அனுப்புவதுகுறித்து

தீக்கதிர் பத்திரிகைக்குச் செய்திகள் கிடைப்பதில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. இந்த முன்னேற்றத்தை மேலும் அதிகரிக்க நம் நிருபர் தோழர்களும் மாவட்ட பிரதேச கிளை பொறுப்பாளர்களும் நம் இயக்கச் செய்திகள் அனைத்தையும் பத்திரிக்கைக்கு தொடர்ந்து அனுப்பவேண்டும்.

செய்திகளை, தாளின் ஒரு பக்கத்தில் மட்டும் எழுதம்படியும். இயக்க நிழ்ச்சி களைப் பற்றிய போட்டோக்கள் அனுப்புவதில் கூடுதல் கவனம் செலுத்தும்படியும் கேட்டுக்கொள்கிறோம்

செய்திகள் செய்திகடிதங்கள். ஆசிரியருக்கு கடிதங்கள் ஆகியவற்றின் உள்ளடக்கத்தையும் செழுமைப்படுத்துவதற்கு நம் நிருபர் தோழர்களும் கிளை பொறுப்பாளர்களும் உறுதியுடன் முயற்சிக்க வேண்டும். இவை அனைத்தும் ஆசிரியர் 'தீக்கதிர்' 13 முதற்சந்து, வடக்கு சித்திரை வீதி மதுரை-1 என்ற விலாசத்திற்கு அனுப்பப்படவேண்டும்.

### தீக்கதிர், செம்மலர் ஏஜண்டுகளின் கவனத்திற்கு

பேங்க் டிராப்ட் வாங்குவதாயிருந்தால், "தீக்கதிர்" மதுரை என்று வாங்கவும். அதே போல் "செம்மலர்" மதுரை என்று வாங்கவும்

மணியார்டர் கூப்பனில் உங்களுடைய முழு தபால் விலாசம், என்ன காரியத்திற்காகப் பணம் அனுப்புகிறீர்கள் என்ற விபரங்களும் குறிப்பிடப் படவேண்டும் (அதாவது ஏஜண்ட் பில்தொகைக்கு, சந்தாவுக்கு அல்லது டிபாசிட்டிற்கு என்பது குறிப்பிடப்படவேண்டும்)

மணியார்டர் அனுப்புவோர். தீக்கதிர்', 13, முதற்சந்து, வடக்குச்சித்திரைவீதி, மதுரை-1 என்று விலாசமிட்டு அனுப்பினால் போதும் அதே போன்று செம்மலருக்கு மணியார்டர் அனுப்புவோர், "செம்மலர்" 13, முதற்சந்து வடக்குச் சித்திரைவீதி, மதுரை-1 என்று விலாசமிட்டு அனுப்பினால் போதும். தீக்கதிருக்கும், செம்மலருக்கும் அனுப்பும் பணத்தை டிராப்டாயினும் சரி, மணியாடர் ஆயினு சரி எக்காரணத்தைக் கொண்டும் சேர்த்து அனுப்பக்கூடாது; தனித்தனியாக அனுப்புக.

தீக்கதிர் நிர்வாகிக்கு அனுப்பவேண்டிய எல்லாக் கடிதப் போக்குவரத்துக்களையும், 'தீக்கதிர்' என்று மட்டும் குறிப்பிட்டு விலாசத்தை எழுதினால் போதும்.

அதேபோல் செம்மலர் நிர்வாகிக்கு அனுப்ப வேண்டிய எல்லாக் கடிதப் போக்குவரத்துக்களையும் "செம்மலர்" என்று மட்டும் குறிப்பிட்டு விலாசத்தை எழுதினால் போதும்.

இந்த அறிவிப்பில் கூறியுள்ளபடி நிருபர் தோழர்களும், ஏஜண்டுத் தோழர்களும் சந்தாதாரர்களும் செயல்படும்படி கேட்டுக்கொள்கிறோம் இதன் மூலம் தோழர்கள் எழுதும் கடிதங்களும் ஏனைய விஷயங்களும் உடனுக்குடன் கவனிக்கப்பட உதவும்படி கேட்டுக்கொள்கிறோம்.

அத்துடன் தீக்கதிர், செம்மலர் பத்திரிகைகளின் விற்பனையை அதிகரிப்பதற்கும் பில் பாக்கிகளை உரிய காலத்தில் அனுப்பி வைப்பதற்கும் எல்லா கிளைகளும் கமிட்டிகளும் தொடர்ந்து பாடுபடும்படி கேட்டுக்கொள்கிறோம்.

மாநில செயற் குழு,
கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)

## நமது வெளியீடுகள்

## மேற்கு வங்கத்தில்

# புதிய தேர்தல் நடத்துக

# தேர்தல் கமிஷனருக்கு ஜோதிபாசு கடிதம்

**கல்கத்தா, மார்ச். 23—**

**தோழர் ஜோதிபாசு தேர்தல் கமிஷனருக்கு பாராநகரிலும் மற்ற தொகுதிகளிலும் தேர்தல் எம் முறையில் நடைபெற்றது என்பதை விளக்கி 19.2 மார்ச் 21-ம்தேதி கீழ்வரும் கடிதத்தை எழுதியுள்ளார்.**

அன்புள்ள சென்வர்மா,

126-நிர் பாராநகர் சட்டமன்ற தொகுதி தேர்தல் அதிகாரிக்கு (பாரக்பூர் சப் டிவிஷனல் அதிகாரிக்கு) மார்ச் 11-ம் தேதி நான் எழுதியுள்ள கடிதத்தைப் பார்க்கவும். அந்தக் கடிதம் 1972 மார்ச் 11-ம் தேதி முற்பகல் 11-30 மணிக்கு (தேர்தல் தேதி)தேர்தல் அதிகாரிக்கு அனுப்பப்பட்டதாகும். அதனுடைய பிரதிகள் மேற்கு வங்க பிரதம தேர்தல் அதிகாரிக்கும் 24-பர்கான மாவட்ட மாஜிஸ்டிரேட்டுக்கும் உங்களுக்கும் அனுப்பப்பட்டன. அக்கடிதத்தில் பாராநகரில் தேர்தலை உடனடியாக நிறுத்த வேண்டும் என்று கோரியிருந்தேன். கவர்னரிடமும் நான் தொலைபேசியில் பேசினேன்.

### பிரதம தேர்தல் அதிகாரிக்கு எழுதிய கடிதத்தில் ......

"நான் காலையில் (மார்ச் 11-ல்) பாரா நகரைச் சுற்றிப் பார்த்து சுதந்திரமான நேர்மையான தேர்தல் சாத்தியமல்லஎன்பதைக்கண்டுள்ளேன். போலீஸஉதவியுடன் ஆயுதம்தரித்த காங்கிரஸ், வலதுகம்யூனிஸ்ட் குண்டர்கள் தோற்றுவித்திருக்கும் சூழ்நிலையில்மக்கள் சுடப்படுகிறார்கள்— கத்தியால் குத்தப்படுகிறார்கள். எங்களுடைய தேர்தல் ஏஜெண்டுகளை விரட்டியடித்த பின்னர் தேர்தல் அதிகாரிகள் முன்பே வாக்குச் சீட்டுகள் பறிக்கப்பட்டு முத்திரையிடப்படுகின்றன. 135 வாக்குச்சாவடிகளில்சுமார் 100 வாக்குச்சாவடிகளின் நிலைமை இதுவே. இராணுவமும் சும்மா பார்த்துக் கொண்டிருக்கிறது" என்று அந்தக் கடிதத்தில் நான் கூறியுள்ளேன்.

இந்தத் தேர்தலை சுதந்திரமாகவும் நேர்மையாகவும் நடத்துவது சாத்திய மற்றிருந்ததால்— என்னுடைய தேர்தல் ஊழியர்களும் தேர்தல் ஏஜெண்டுகளும் உயிருக்குபேராபத்தானநிலைக்கு உட்பட்டிருந்ததால்—அவர்களுடைய பாதுகாப்பை உத்தேசித்து மற்றவாக்குச் சாவடிகளிலிருந்து என்னுடைய சுமார் 30 தேர்தல் ஏஜெண்டுகளையும் திரும்பப்பெற நான் முயன்றேன்.

மார்ச் 11-ம் தேதியன்று மாலை 4 மணிக்கு பல பகுதிகளிலிருந்து எங்களுடைய அலுவலகத்துக்கு இம்மாதிரிச் செய்திகள் வந்தன மறு தேர்தல் நடத்துமாறு வற்புறுத்தி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மேற்கு வங்க மாநிலக் குழுவின செயலாளர் பிரமோத்தாஸ் குப்தா உங்களுக்குத் தந்தி அனுப்பினார். பின்னர் மாநிலமெங்குமிருந்து தேர்தல் மோசடி பற்றி தகவல்கள் வந்தன. தேர்தல் சுதந்திரமாகவும் நேர்மையாகவும் நடைபெற்றதாக மத்திய மாநில அரசாங்கத் தலைவர்களும், திருமதி இந்திரா காந்தி உள்ளிட்ட ஆளும் காங்கிரஸ் தலைவர்களும் கூறியிருப்பதில் அணு அளவும் உண்மையில்லை. உண்மையில் அவர்கள் குற்றம் சாட்டப்பட்டிருப்பவர்கள். ஆகவே பெயரளவு விசாரணை கூடச் செய்யாமல் உடனடியாக மறுப்பு விடுத்துள்ளார்கள். தேர்தல் முழுவதும் மோசடியானது. மேல் மட்டத்தில் முன்கூட்டித் திட்டமிட்டுச் சதி செய்யப்பட்டுள்ளது. வன்முறை பற்றியும் பயங்கர அடக்குமுறை தாண்டவம் பற்றியும் தேர்தலுக்குமுன்பே உங்களிடம நாங்கள் தெரிவித்த பயம் சரியானது என்று நிரூபிக்கப்பட்டது மட்டுமின்றி பல தொகுதிகளில் நாங்கள் யூகித்ததற்கும்மேலாகஇருந்துள்ளது. மேலும்வாக்குச் சீட்டுகளும் வாக்குப் பெட்டிகளும் பேத்து-மாத்து செய்யப்பட்டிருப்பதும் பல தொகுதிகளில் வாக்குகளை எண்ணுமபோது மோசடி செய்யப்பட்டிருப்பதும் இப்போது அம்பலமாகியுள்ளது. **சில இடங்களில் தோற்ற வேட்பாளர்கள் வெற்றி பெற்றவர்களாகப் பிரகடனப் படுத்தப் பட்டுள்ளனர்.**

### தொலைபேசியில் கூப்பிட்டோம்

கல்கத்தாவிலிருந்து 1972 மார்ச் 11ம் தேதி தேர்தல் தொடங்கிய ஒருசில மணி நேரத்துக்குள்ளாகவே அப்போது எங்களுக்குத் தெரிந்த நிலைமையைப் பற்றி ஜோதிர்மாய்பாசு எம். பி. உங்களுடன் தொலைபேசியில் பேசினார். மேற்குவங்க பிரதம தேர்தல் அதிகாரி டி. கே. குகாவுடனும் ஜோதிர்மாய்பாசு தொலைபேசியில் பேசினார். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பிரதிநிதிகளுடனும மற்ற இடதுசாரி முன்னணிக் கட்சிகளின் பிரதிநிதிகளுடனும் கூட்டாக சில வாக்குச் சாவடிகளைச் சுற்றிப்பார்க்குமாறு பிரதம தேர்தல் அதிகாரியை அவர் கேட்டுக்கொண்டார். கல்கத்தாவுக்கு நீங்கள் அனுப்பிய ஏ என். சென்னை இடதுசாரி கட்சிகளின் பிரதிநிதிகளுடன் சில வாக்குச் சாவடிகளுக்குக் கூட்டிச் செல்ல முயற்சிக்கப்பட்டது. ஆனல் இதனலெல்லாம் ஒரு பயனும் ஏற்படவில்லை.

### சென்வர்மா வர மறுப்பு

புது டில்லியில் 1972 மார்ச் 12ம் தேதி எங்கள் கட்சியைச் சேர்ந்த நாடாளுமன்ற உறுப்பினர்கள் உங்களைச் சந்தித்து மோசடித் தேர்தலைப் பற்றி அப்போது தெரிந்திருந்த அனைத்தையும் உங்களுக்கு விளக்கினார்கள். மேற்கு வங்கத்துக்கு உடனே வருமாறும் உங்களைக் கேட்டுக்கொண்டார்கள். ஆனல் நீங்கள் டில்லியை விட்டு வரமுடியாது என்று கூறினீர்கள்.

ஆளும் கட்சியின் தேவைகளுக் கேற்ப தேர்தலை நடத்தும் அமைப்பிலும் அடியோடு மாறுதல் செய்யப்பட்டு முடுக்கி விடப்பட்டது. **அரசாங்க இலாகாக்களில் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான பேருக்கு தற்காலிக வேலைகள் கூட அளிக்கப்பட்டன. அல்லது மற்ற இடங்களில் அவர்கள் தேர்தல் பணிக்கு அமர்த்தப் பட்டனர்.** ஆனல் இவைகளை யெல்லாம் செய்தாலும் பல வாக்குச் சாவடி அதிகாரிகளும் தேர்தல் அதிகாரிகளும் போலீஸ் முன்னிலையில் எவ்வாறு ஆயுதமேந்திய குண்டர்களால் தேர்தல் நடத்தப் பட்டது என்பதை பற்றியும்,அந்தக்குண்டர்கள் எவ்வாறு வாக்குச் சீட்டுகளைக் கைப்பற்றி முத்திரையிட்டனர்என்பதைப் பற்றியும்,வாக்காளர்கள் எவ்விதம் வீட்டுக்குப் போகுமாறு கேட்கப்பட்டனர்என்பதைப்பற்றியும்என்னிடம் கூறினார்கள். இந்தக் கட்டத்தில பாதுகாப்பைக் கருதி அந்த அதிகாரிகளின பெயர்களை வெளியிட முடியாது.

### தேர்தல் அதிகாரி கூறியது

126 நிர் பாராநகர் தொகுதியில் ஒரு வாக்குச் சாவடியில் பணியாற்றிய அதிகாரி தன் அனுபவத்தைக் கீழ்வரும் வார்த்தைகளில் விவரிக்கிறார்:—

"1972 மார்ச் 10-ம் தேதி காலை 6-30 மணிக்கு நான் போய்ச் சேர்ந்ததும் எனக்கும் இன்னொரு தேர்தல் அதிகாரிக்கும் இருவர் அறிமுகபபடுத்தப்பட்டனர், அவர்களில் ஒருவர் காங்கிரஸ்காரர். மற்றவர் வலது கம்யூனிஸ்ட். (பெயர்கள் கூறப்பட்டன. ஆனல் நான வெளியிடவில்லை)

இப் பகுதியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஊழியர்களை அகற்றுவதற்கு டம்டம் போலீஸ் நிலையத்திலுள்ள போலீஸ், முன்னர் எவ்விதம் உதவினர்என்று எங்களிடம் அவர்கள் கூறினர். தங்களிடம் ஆயுதங்கள் இருப்பதால் முழு பாதுகாப்பு அளிப்பதாக அவாகள் வாக்களித்தனர். ஒத்துழைப்பு நல்குமாறு எங்களை (தேர்தல் அதிகாரிகளை) அவர்கள் கேட்டனர். 1972 மார்ச் 11ம் தேதி காலை 6மணிக்கு தூக்கத்திலிருந்து எழுந்து காலை 7 மணிக்கு வாக்கெடுப்பைத் தொடங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்தேன். வலது கம்யூனிஸ்ட் கட்சியின் ஒரு தர்தல் ஏஜெண்டு அங்கிருந்தார். ஆனல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தேர்தல்ஏஜெண்டு வரவில்லை. நான் 10 நிமிடங்கள் காத்திருந்துவிட்டு வாக்கெடுப்பைத் தொடங்கினேன. சுமார் 200 ஆண், பெண்கள் அடங்கிய கியூ வரிசை நின்றது. சுமார் ஒரு மணி நேரம் கழித்து காலை 8 மணிக்கு வெளியேயிருந்து சில தொண்டாகள் வந்து ஜன்னல் வழியாக வலது கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளருக்கு ஓட்டுப் போடுமாறு மக்களைக் கேட்டார்கள். நான் ஜன்னலை மூடியதால் மிரட்டப்பட்டேன். காலை 8-30 மணிக்கு பத்து ரௌடிகள் ஆர்ப்பாட்டமாக உள்ளே நுழைந்து வாக்குச் சாவடிக்குள் வியூகம் வகுத்துக் கொண்டனர். நான் ஆட்சேபித்தேன். ஆனல் அவர்கள் எங்களை மிரட்டினார்கள். சும்மாயிருக்குமாறு கேட்டார்கள். வலது கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளருக்கு ஓட்டுப்போட ஒரு பெண் மறுத்தார். அவர்கள் முனனிலையில் அந்தப் பெண்ணின வாக்குச் சீட்டு பறிக்கப்பட்டது. ஒன்றும் செய்ய முடியாதாகையால் சும்மாயிருக்க வேண்டும் என்று அப்போது பணியிலிருந்த தேசிய தொண்டர் படையைச் சேர்ந்தவர்களும் போலீசும் என்னைக் கேட்டார்கள். தன கட்சியைச் சேர்ந்த ஆட்களை— ரௌடிகளை வாக்குச் சாவடியை விட்டு வெளியேற்றுமாறு நான் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் தேர்தல் ஏஜெண்டைக் கேட்டேன். தன்னல் ஒன்றும் செய்ய முடியாது என்று அவர்கூறினார்.நான்ரௌடிகளிடம் அவர்கள் அந்த ஸ்தலத்தைச் சேர்ந்த பையன்கள்தான என்று கேட்டேன். சிலர் டம்டம்மிலிருந்து வந்திருப்பதாகக் கூறினர். மீண்டும் ஒரு இளம்பெண் சுதந்திரமாக ஓட்டுப்போட முடியவில்லை என்று ஆட்சேபம் தெரிவித்தாள். அவளுடையதலைமயிரைப் பிடித்து இழுத்துச் சென்றார்கள். அதற்குப் பின் வாக்காளர்களைக் கலைந்து செல்லுமாறு அவர்கள் கேட்டார்கள். வாக்குச் சீட்டுகளில் கையெழுத்திட்டுக் கொடுக்குமாறு நான் உத்தரவிடப் பட்டேன், கதவுகள் மூடப்பட்டன. வாக்குச் சீட்டுகள் முத்திரையிடுவது தொடங்கியது. நண்பகல் 12-மணிக்கு 1090 ஓட்டுகள் போடப்பட்டன. அவர்கள் ஒருசில வாக்குச் சீட்டுகளை முத்திரையிடாமலும் விட்டுச் சென்றனர். பின்னர் ரௌடிகள் வாக்குப் பெட்டிக்குச் சீல் வைக்குமாறு என்னைக் கேட்டனர். சட்டப்படி வாக்குப் பதிவு மாலை 5 மணி வரை நடைபெற வேண்டும் என்றும் ஆகவே அந்த நேரத்துக்கு முன்பாக பெட்டிக்குச் சீல் வைக்க முடியாது என்றும் நான் அவர்களிடம் கூறினேன். மாலை 5 மணிக்குப் பிறகு இரு காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட் தலைவர்கள் வாக்குச் சாவடி அதிகாரியின் பாரத்தைப் பூர்த்தி செய்யுமாறு என்னிடம் கேட்டார்கள். அவர்களுடைய முன்னிலையில் பூர்த்தி செய்ய நான் தயங்கினேன். ஆனல் பூர்த்தி செய்யுமாறு அவர்கள் என்னை நிர்ப்பந்தித்தனர். கடந்த தேர்தலில் (1971-ல்) ஜோதிபாசு இங்கும் பக்கத்திலுள்ள வாக்குச் சாவடியிலும் 90-சத விகித வாக்குகளைப் பெற்றார் என்று என்னிடம் அவர்கள் கூறினர். இந்தத் தடவை அதை மாற்றிவிட்டதாகவும் அவர்கள் கூறினர் எதையும் வெளிப்படுத்தினல் பயங்கர விளைவுகள் ஏற்படும் என்று அவர்கள் அங்கிருந்து போகு முன் என்னைப் பயமுறுத்தினர்.

### 10—ம் தேதி இரவே

மிகப் பெரும்பான்மையான வாக்குச் சாவடிகளில் நடந்திருப்பது இதுதான். பல வாக்குச் சாவடிகளில் மோசடிக்கு ஒத்துழைக்கும் அதிகாரிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

10-ம் தேதி இரவு பாராநகரின் பல பகுதிகளிலிருந்து விரிவான அளவில் மிரட்டல் நடைபெறுவதாகவும் ஓட்டுப்போட முயற்சித்தால் கடுமையான விளைவுகள் ஏற்படும் என்றும் ஆயுதம் தரித்த காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட் குண்டர்கள் வாக்காளர்களை மிரட்டி வருவதாகவும் எனக்குத் தகவல்கள் வந்தன. எங்களுடைய சில ஆதரவாளர்கள் அவர்களுடைய வீடுகளிலிருந்து விரட்டியடிக்கப்பட்டனர். நான் போலீசில் தொடர்புகொண்டபோது ரௌடிகளுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கத் தங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்றும் அவர்கள் கூறினர். ஆனலும்கூட சதியின் அளவு எத்தகையதுஎன்பதை என்னல் தெரிந்துகொள்ள முடியவில்லை. என்றாலும் தேர்தல் தினத்தன்று காலை 10-மணிக்குத் தொகுதியை சுற்றிப்பார்த்தபின்னரும்—பல வாக்குச்சாவடிகளுக்கு என்னுடைய தேர்தல் ஏஜெண்டுகளை அனுப்ப போலீஸ் பாதுகாப்புக்கேட்டதும், நான்அனுப்பியிருந்த தேர்தல் ஏஜெண்டுகளுக்குப் பாதுகாப்புக் கோரியதும், பயனற்றுப் போனது என்பதை தெரிந்து கொண்ட பின்னரும்—கியூ வரிசையில் நின்ற வாக்காளர்கள் விரட்டியடிக்கப்பட்ட பின்னரும் தேர்தலை மோசடி செய்ய அரசாங்கத்தின் மேல் மட்டத்தில் நனகுதிட்டமிடப்பட்டசதி உருவாக்கப்பட்டுள்ளது என்பதை உணர்ந்தேன். ஆகவே தேர்தலை ஒத்திப்போட வேண்டும் என்று முற்பகல் 11 மணிக்கு நான் கோரினேன். பின்னர் என்னுடைய தொகுதி மட்டும் விதிவிலக்கானதல்ல என்பதை நான் கண்டேன். **பாராநகருக்கு பிற்பகல 3 மணிக்கு வந்த அதிகாரிகள்புகார்செய்தஎங்களைச் சந்திப்பதற்கு அக்கறைகூடக் காட்டாமல் உல்லாசமாகச் சுற்றிவிட்டு அனைத்தும் சரியாக இருக்கிறது என்று அறிவித்ததைப் பற்றி இப்போது எனக்கு ஆச்சரியம் ஏற்படவில்லை.** தேர்தலுக்கு முன்பாக எங்களுடைய பலமான பகுதிகளில் குண்டர்களும் போலீசும் கூட்டாக இயங்கியதின் காரணமாக நாங்கள் சுதந்திரமாக நடமாட முடியவில்லை என்று உங்களிடம் நேரிடையாக உணர்த்த நாங்கள் எல்லா முயற்சிகளும் செய்தபோதிலும் நிலைமை திருந்தவில்லை என்பதைஉங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். தேர்தல் கமிஷன் அரசாங்கத்தின் தொங்குசதையாக மாறி வெறுத்தொதுக்கப்படுகிறது என்பது தெளிவாகி



**தோழர் ஜோதிபாசு**

விட்டது. இவ்விதம் இடதுசாரி எதிர்க்கட்சிகள் காங்கிரசுக்குச் சவாலாக மாறியுள்ள மேற்குவங்கத்தில் நாடாளுமன்ற ஜனநாயகமுறை குலைக்கப்பட்டுள்ளது.

தேர்தல் நடத்தப்பட்டிருக்கும் விதம் தேசிய மோசடியாகியுள்ளது. இது நம் மக்களுக்கே அவமானமாகும். இதனல்தான் விநோதமான முடிவுகள் அறிவிக்கப்பட்டதும் மக்களிடம் மகிழ்ச்சி ஆரவாரம் ஏற்படவில்லை. அதற்குப்பதில் ஆழ்ந்த விரக்தியுணர்வும் தேர்தலில் நம்பிக்கையிழக்கும் உணர்வும் காணப்படுகிறது.

### ஆயிரக்கணக்கான குடும்பங்கள் வெளியேற்றம்

தேர்தல் நடந்து முடிந்தவுடனேயே ஆளும் காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட் குண்டர்கள் விரிந்த அளவில் தாக்குதலைத் தொடங்கியுள்ளனர். போலீஸ் முன்னிலையிலும் சில சமயம் போலீஸ் உதவியுடனும் இத்தாக்குல் தொடுக்கப்பட்டுள்ளது. ஆயிரக்கணக்கான குடும்பங்கள் தங்கள் வீட்டைவிட்டு வெளியேறுமாறு நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளன. எங்கள் கட்சி ஊழியர்கள், ஆதரவாளர்கள் பலரின வீடுகள் சூறையாடப்பட்டுள்ளன. அவர்களுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அவமானப் படுத்தப்பட்டுள்ளனர். பல தொழிற் சங்க அலுவலகங்களும் எங்களுடைய கட்சி அலுவலகங்களும் குண்டர்களால் பலாத்காரமாகக் கைப்பற்றப் பட்டுள்ளன. சட்டம் ஒழுங்கின் சுவட்டைக்கூட காண முடியவில்லை.

தேர்தலில் வேலை செய்த இடதுசாரி முன்னணியின் ஊழியர்களும் ஆதரவாளர்களும் ஆயுதம் தரித்த குண்டர்களால் தொடர்ந்து தாக்கப்பட்டும் மிரட்டப்பட்டும் வருகின்றனர்.

**இந்தக் குண்டர்களைக் கைது செய்ய வேண்டாம் என்று போலீசுக்கு உத்திரவிடப்பட்டுள்ளது.**

### நம்பமுடியுமா?

மிகப்பெரும் வெற்றி கைவரப்பெற்றிருக்கும் ஒரு கட்சி நடந்து கொள்ளக்கூடிய முறை இது தானா? காங்கிரஸ் செய்திருக்கும் குற்றங்களை அது முற்றும் தெரிந்திருக்கிறது. அதனலதான் தேர்தலுக்குப் பின் இந்த வெறியாட்டமும் அடக்குமுறை தாண்டவமும் கட்டவிழத்துவிடப் பட்டுள்ளன. எல்லா தேர்தல்களிலும் நல்ல மெஜாரிடியுடன் நாங்கள் வெற்றி பெற்றுள்ள— வழக்கமான எங்கள் தொகுதிகளில் காங்கிரஸ் பெற்றுள்ள "பழைய சாதனைகளை மிஞ்சும் மெஜாரிடிகள்" சில உங்களுக்கு விநோதமானவைகளாகப் படவில்லையா?

**ஒரு சில உதாரணங்கள்—காங்கிரஸ் மெஜாரிட்டி நந்தனகாட்டில் 59 ஆயிரம், கல்வுவில் 62 ஆயிரம், டம்டமில் 76 ஆயிரம், பாரா நகரில 39 ஆயிரமாகும்.**

**பாரா நகரில் நடந்தது போன்று மதியம் 1 மணிக்குள் மொத்தம் 1 லட்சத்து 14 ஆயிரம் வாக்குகளில் 99 ஆயிரம் வாக்குகள் பதிவானது மனித சக்தியினல் சாத்தியமாகுமா? அல்லது டம்டமில் 1 லட்சத்து 36 ஆயிரம் வாக்குகள் பதிவானது எப்படி சாத்தியமாகும்?**

**கமராத்தி தொகுதியில் 16 ஆயிரம் ஓட்டுகளுக்குமேல் ரத்து செய்யப்பட்டிருக்கிறது என்பது நம்பத் தகுந்ததுதானு?**

**(4-ஆம் பக்கம் பார்க்க)**

# கண்ணோட்டம்

## வறுமையை ஒழிக்க

# முடுக்கிவிடுக அச்சு இயந்திரத்தை!

ஆளும் காங்கிரசின் வறுமை ஒழிப்பு என்பது ஒரு போலி நாடகம் என்பதை ஆரம்ப நாளிலிருந்தே கூறி வருகிறது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி.

சோசலிசம் பற்றி பேசுவதும், வேலையில்லா திண்டாட்டத்தை ஒழிக்கப் போவதாக வாய்ச் சவடால் அடிப்பதும், எல்லோருக்கும் இன்பமான வாழ்வு அளிக்கப்போவதாகப் பசப்புவதும், சாதாரண மக்களை ஏமாற்றி அவர்களது ஓட்டுக்களைப் பறிப்பதற்காகத்தான் என்று மார்க்சிஸ்ட் கட்சி கூறி வருகிறது.

முதலாளி வர்க்கத்தின் ஏடுகள், அகில இந்திய ரேடியோ, அரசாங்கத்தின் சகல பிரச்சார சாதனங்கள் அனைத்தையும் பயன்படுத்தி இந்த ஏமாற்றுப் பிரச்சாரத்தை தற்காலிகமாக, வெற்றிகரமாகச் செய்து முடித்துள்ளனர்.

வெட்டிக்காரன் புளுகும் எட்டு நாளைக்கு தான் என்பார்கள்

பீதாம்பரப் பட்டாடைப் போட்டு மூடி மறைத்தாலும் குஷ்டரோகத்தை நெடுநாளைக்கு மறைத்துவிட முடியாது.

உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை அழுகி நாற்றம் எடுக்கும் இன்றைய ஆட்சியிலே, இதன் அவலட்சணங்கள் உண்மை விபரங்கள் முன்னே டமீர், டமீர் என வெடிக்கின்றன.

உண்மை ஒரு நாள் வெளியாகும்—அதிலே
உள்ளங்கள் எல்லாம் தெளிவாகும்

என்று கவிஞர் பட்டுக்கோட்டை பாடியதுபோல—

காங்கிரஸ் ஆட்சியால் ஏற்பட்டு வரும் பயங்கர பொருளாதார நெருக்கடிகள் ஒவ்வொன்றும் விசுவரூபம் எடுத்து வருகின்றன.

நான்கு ஐந்தாண்டுத் திட்டங்கள் தீட்டினார்கள்.

எதற்காக?

மக்களின் நன்மைக்காக, முன்னேற்றத்திற்காக, எல்லோருக்கும் சமதர்மம் வழங்குவதற்காக

ஆனால் ஒவ்வொரு ஐந்தாண்டுத்திட்டத்திற்குப் பிறகும் உயர்கிறது—உயர்கின்றன, பொருள்களின் விலைகள்.

படி அரிசி விலை அரை ரூபாயிலிருந்து 2½, மூன்றாக உயர்ந்த சில்லறை விலைக் கணக்கல்ல. ஆனால் மொத்த விலைக் கணக்கின் விபரத்தைக் கேளுங்கள்.

"எக்னாமிக் டைம்ஸ்" என்ற ஏடு" முதலாளிகள் நடத்தும் பொருளாதார ஏடாகும். இதில் வெளியாகும் மொத்த விபரக் கணக்கில் பல குறைபாடுகள் இருந்தாலும் சென்ற பத்தாண்டு காலத்திய மொத்த விலை விபரங்களைக் கீழே தருகிறோம்.

1961—62-ம் ஆண்டில் எல்லாப் பொருள்களின் மொத்த விலை 100 என்று கொண்டு "எகனாமிக் டைம்ஸ்" கணக்கு வெளியிடுகிறது.

முதலில் உணவு வகைகளை எடுத்துக் கொள்வோம். 1961—62-ல் 100-ஆக இருந்த உணவு விலை 1965—66-ல் 145 ஆக உயர்ந்தது. அடுத்த ஆண்டில் 171 ஆக உயர்ந்தது. அதற்கும் அடுத்த ஆண்டில் 207-ஆக உயர்ந்தது.

பத்தாண்டுகளில் உணவுப் பொருள்களின் விலை எவ்வளவு உயர்ந்தது பார்த்தீர்களா? 210 சதவீதம் விலைவாசிகள் உயர்ந்துள்ளன.

எல்லாப் பொருள்களின் விலைகளையும் சேர்த்து ஒட்டுமொத்தமான கணக்கையும் வெளியிட்டுள்ளனர். இவைகளின் மொத்த விலை 1961-62ல் 100 என்று கொண்டால், 1965-66ல் இது 132 ஆக உயர்ந்துள்ளது. அடுத்த ஆண்டில் 167 ஆயிற்று. அதாவது ஒரே ஆண்டுகளில் 35 புள்ளிகள் உயர்ந்தன. இந்த உயர்வு மேல் நோக்கி உயர்ந்துசென்று 1972 பிப்ரவரியில் 180 ஆக வந்துள்ளது. இதன் பொருளென்ன? இந்த நாட்டிலுள்ள மொத்தப் பொருளின் விலைகள் 190 சதவீதம் உயர்ந்துள்ளன என்பதாகும்.

இதே காலகட்டத்தில் நியாயமான சம்பளம் வாங்கிய மக்களுடைய வருவாய் உயர்ந்ததா? இல்லை. விலைவாசி உயர்வுக்கு தகுந்த சம்பள உயர்வு எங்கும் இல்லை. எந்தத் தொழிலிலும் இல்லை! அரசு ஊழியர்களுக்கும் இல்லை; தொழிற்சாலைகளில் பணியாற்றும் தொழிலாளருக்கும் இல்லை. அப்படியே கிடைத்தாலும் அது அற்ப சொற்பமே.

விலைவாசிகளை உயர்த்தியவர்கள் யார்? முதலாளிகள், உற்பத்தியாளர்கள் தொழிற்சாலைகளையும் நிலங்களையும் கையில் வைத்துக்கொண்டு உற்பத்தியில் ஈடுபடுவோர்.

இந்தப் பொருளை வாங்குபவர்கள் யார்?

முன்னைவிட குறைவான சம்பளம் வாங்கும், கூலி வாங்கும், ஊதியம் வாங்கும் ஏழை, நடுத்தர மக்கள்.

உற்பத்தியாளர்கள் 190 சதவிகித விலைவாசியை உயர்த்தி அந்த அளவிற்கு வாங்குபவர்களிடம் கொள்ளையடித்தார்கள்?

இலாபக் கணக்கு வேண்டுமா? இப்பொழுது தரப்போவது உண்மையான கணக்கல்ல; அரை குறைக் கணக்கு—குறைவான கணக்கு.

டாடாவுக்கு சொந்தமான ஒரே ஒரு கம்பெனியில் 1969—70-ம் வருட மொத்த லாபம் 11 கோடியே 16லட்சம். இதற்கு அடுத்த ஆண்டில் அந்தலாபம் 14கோடியே 23 லட்சமாக உயர்ந்தது. ஒரே ஆண்டில் இலாப உயர்வு 3 கோடியே 7 லட்சம்.

இதே மாதிரி ஒவ்வொரு பெரிய உற்பத்தியாளரும் மக்களை கொள்ளையடித்த வரலாறுதான் நான்கு ஐந்தாண்டுத் திட்டத்தின் வரலாறு.

இவ்வாறு முதலாளி வர்க்கம் மேலும் மேலும் கொள்ளை லாபம் அடிக்க ஊக்குவிப்பதற்குத்தான் ஐந்தாண்டுத் திட்டங்களும், வரிகளும் போடப்படுகின்றன. முதலாளிகள், நிலச்சுவான்தார்கள் மீது கை வைப்பதில்லை.

திட்டங்களுக்கு வேண்டிய பணத்தை அன்றிருந்த நேரு அரசாங்கமும், அவருடைய அருமைப் புத்திரியான இந்திரா அரசாங்கமும் எப்படி சேகரிக்கின்றன தெரியுமா?

மண்ணெண்ணெய் மீது வரி, துணி மீது வரி, உரத்தின் மீது வரி, பிரயாணத்தின் மீது வரி என்று வரிமேல் வரி வசூலிப்பதோடு, இன்னொரு உபாயத்தையும் கையாண்டு வருகிறனர். அது என்ன?

அதுதான் நோட்டடிக்கும் அச்சு இயந்திரம். பற்றாக்குறை எவ்வளவு விழுந்தாலும் அவ்வளவுக்கும் நோட்டை அச்சடித்துக் கொள்கின்றனர். இது அரசாங்க பாங்கான ரிசர்வ் பாங்கின் பெயரில் அச்சடிக்கப் படுகிறது.

நான்கு ஆண்டு திட்டகாலத்திலும் இதே கதை தான். நான்காவது திட்ட கதையை மட்டும் இங்கே சொல்கிறோம்.

நான்காவது திட்டத்தில் பற்றாக்குறையென நோட்டு அச்சடிக்கத் திட்டமிட்டது ரூ 1 100 கோடி. ஆனால் இது போதாது என்று மேலும் 400 கோடி அச்சடிக்கப் போவதை ஊர்ஜிதம் செய்து அமைச்சர் மோகன்தாரியாவே நாடாளுமன்றத்தில் 22—3—72-ல் ஒப்புக் கொண்டுவிட்டார்

புதிய புதிய வரிகள் விதித்து விலைவாசிகளை உயர்த்தி மக்களைக் கொள்ளையடிப்பதோடு நோட்டு அச்சடிக்கும் இயந்திரத்தையும் முடுக்கிவிட்டு, நோட்டு அச்சடிப்பதுதான் பெருமுதலாளிகளைத் தொடாமல் மக்களை வஞ்சித்து அரசுக்கு பணம் சேர்க்கும் வழி, இந்திரா காந்தியின் வறுமை ஒழிப்பு வழி! இதனால் மேலும் மேலும் விலைவாசி உயரும். மேலும் மேலும் மக்கள் வஞ்சிக்கப்படுவார்!

முடுக்கிவிடுக! கள்ள நோட்டல்ல, அரசாங்கமே மக்களைக் கொள்ளையடிக்கும் வெள்ளை நோட்டு. அசல் நோட்டு அடித்திட அதற்கு அச்சடிப்பு எந்திரத்தை முடுக்குக! மேலும் மேலும் வேகமாக முடுக்குக! எதற்கு? வறுமையை ஒழிக்க! டாடா, பிர்லா தொப்பைகளை மேலும் பெருக்குக

இதனால் மேலும் உயரப்போகும் விலைவாசிகளால் வறுமை ஒழிப்பின்,

உண்மை வெளியாகுது—மக்களது உள்ளங்களும் தெளிவாகும் காலம் வருகிறது!

—கே. எம்.

---

## சேலம் மாநாட்டில்

# முதலமைச்சர் வாக்குறுதி என்னவாயிற்று?

## என். ஜி. ஓ. சங்கத் துணைத்தலைவர் கேள்வி

கூடலூர், (நீலகிரி), மார்ச் 25 —

நீலகிரி மாவட்டத்தைச் சேர்ந்த கடலூரில் மார்ச். 20-ந் தேதி மாலையில் பஞ்சாயத்து யூனியன் கட்டடத்தில் கடலூர் என். ஜி. ஓ. சங்க சிறப்புக் கூட்டம் நடந்தது. சங்கக் கிளைத் தலைவர் தலைமை வகித்தார்.

கூட்ட ஆரம்பத்தில் மாநிலத் துணைத் தலைவர் திரு ஜெ. என் பரதனையும், நீலகிரி மாவட்டச் செயலாளர் திரு. எஸ். எஸ் ரெங்கராஜனையும் வரவேற்று தலைவர் பேசினார். அவர் பேசும்போது என். ஜி. ஓ.க்கள் மிகவும் ஏமாற்றமடைந்துள்ளதாகக் குறிப்பிட்டார். மாநில மாநாட்டிற்குப் பின்பும், பட்ஜெட் அறிக்கைக்குப் பின்பும் இனியும் காலதாமதமின்றி பஞ்சப்படியைப் பெறுவதற்குத் திட்டம் எதுவுமில்லாமல் மாநிலத் தலைமை தமிழக அரசின் போக்கிற்கு ஒத்துப்பாடுவதாகக் கண்டித்தார். பஞ்சப்படி பிரச்சினையில் மாநிலப் பொருளாளர், மாநிலத் துணைத்தலைவர் (வெளியூர்) ஆகியோரது நிலை குறித்து, பாராட்டுவதாகவும் கூறினார்.

### பட்டதாரி ஆசிரியருக்கு பாராட்டு

பின் நீலகிரி மாவட்டச் செயலாளர் திரு. எஸ். எஸ் ரெங்கராஜன் பேசுகையில், 6—3—72 அன்று பட்டதாரி ஆசிரியர்கள் நடத்திய போராட்டம் குறித்துப் பாராட்டினார். என். ஜி. ஓ.க்கள் தங்களது கோரிக்கைகளை விட்டுக் கொடுக்கத் தயார் என்று, முதலமைச்சருடன் பட்டதாரி ஆசிரியர்கள் பிரதிநிதிகள் பேச்சுவார்த்தை நடத்தும்போது உடன் இருந்த என். ஜி. ஓ சங்க முக்கிய பொறுப்புள்ள ஒருவர் கூறியதை வன்மையாகக் கண்டித்துப் பேசினார்.

மேலும் அப்பிரமுகர் பட்டதாரி ஆசிரியர்களுடன் சுமார் ஒன்றரை மணி நேரம் அரசு சார்பில் வாதாடியதையும் கண்டித்துப் பேசினார்.

பின் மாநிலத் துணைத் தலைவர் திரு. ஜெ. எஸ் பரதன் பேசினார். அவர் கூறியதாவது:—

### பரதன் உரை

பிப்ரவரி மாதம் 20-ந் தேதி நடந்த என். ஜி. ஓக்களின் சேலம் மாநாட்டில் முதலமைச்சர் "பொருளாதார கோரிக்கைகளை மாநாட்டில் அறிவிப்பதற்கில்லை என்றும், ஏனெனில், பட்ஜெட் 1—3—72-ல் வெளியாகவிருப்பதால், அதில் அறிவிக்க வேண்டிய பொருளாதாரச் சலுகைகளை இப்போது அறிவித்து விட்டால், பட்ஜெட் ரகசியம் வெளியிட்டதற்காக உங்களுக்காக வாதாடக் கூடியவர்களும், என்மேல் குறை கூறுவார்கள் என்றும் ஆகவே, சில நாட்கள் பொறுத்திருக்கும்படியும் கூறினார், ஆனால் 1-3-72ல் வெளியான பட்ஜெட்டில் நாம் எதிர்பார்த்த பஞ்சப்படி போன்ற ஊதிய உயர்வு கோரிக்கைகள் எதுவும் அறிவிக்கப்படவில்லை.

### தவறான எண்ணத்தைப் பரப்ப முயற்சி

மாறாக, சில முக்கிய ஊர்களில் பணிபுரியும் என். ஜி. ஓ.க்களுக்கு — வீட்டு வாடகைப் படி மூன்று கால கட்டங்களில் உயர்த்துவதென, இரண்டாவது ஊதியக் குழுவின் சிபாரிசின்படி, முதலாவது காலகட்டமாக 2—10—70 முதல் வீட்டு வாடகைப்படி உயர்த்திக்கொடுக்கப்படும் என்றும், இரண்டாவது காலகட்டமாக, 1—4—72 முதல் வீட்டு வாடகைப்படி உயர்த்தப்படும் என்றும் முன்பு அறிவித்தபடி— அதற்கு நிதி ஒதுக்கீடு செய்துவிட்டு, அதை மக்கள் மத்தியில் திரும்பவும் என். ஜி. ஓக்களுக்கு ஊதிய உயர்வு கொடுத்திருப்பதுபோல தவறான எண்ணத்தை ஏற்படுத்தும் வகையில் முதலமைச்சரால் அறிவிக்கப்பட்டது. ஏற்கனவே 1—4—72 முதல் இரண்டாவது கால கட்டமாக வீட்டு வாடகைப் படி உயர்வு அறிவிக்கப்பட்டதைத்தான், ஊதியச் சலுகைகள் என்று நினைத்து முதலமைச்சர் இதைத்தான் பட்ஜெட் ரகசியம் என்று சேலம் மாநாட்டில் சொல்லியிருப்பாரோ என்ற ஐயம் என். ஜி. ஓக்கள் மத்தியில் இருக்கிறது என்று குறிப்பிட்டார்.

### நேரடி நடவடிக்கை ஆதரவு

மேலும் அவர் பேசுகையில், 5—3—72-ல் சென்னையில் மத்திய செயற்குழுக் கூட்டத்தில் மத்திய அரசும், ஏனைய மாநில அரசுகளும் அறிவித்த பஞ்சப்படி உயர்வுகளை தமிழ்நாடு அறிவிக்காமல் இருப்பதால் இனியும் காலதாமதமின்றி நேரடி நடவடிக்கைகளுக்கான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட வேண்டுமென்று மதுரை—இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களின் பிரதிநிதிகள் வலியுறுத்தியபோது, தானும், மாநில பொருளாளர் எம். ஆர். அப்பனும் அதற்கு ஆதரவு தெரிவித்ததாகக் குறிப்பிட்டார்.

### எதிர்ப்பு

6—3—72-ல் முதலமைச்சரைச் சந்தித்தபின் மாலை 7 மணிக்கு யூனியன் கட்டடத்தில் நடந்த செயல்முறைக்குழு கூட்டத்தில், கொண்டுவரப்பட்ட முதல் வருடம் நடந்த பேச்சுக்கு நேர்மாறான தீர்மானத்திற்கு, திரு அப்பனும் தானும் எதிர்ப்பு தெரிவித்ததாகவும் கூறினார் இனியும் காலதாமதமின்றி உடனடியாக பஞ்சப்படி உயர்வு அளிக்கப்பட வேண்டுமென்று முதலமைச்சரிடம் மாநிலத் தலைவர் பேசவில்லை என்றும், ஊதியக்குழு குறைபாடுகள் தீர்ப்பதற்காக அமைக்கப்பட்டதாகச் சொல்லப்படும் அரசுத் தலைமைச் செயலாளரைக் கொண்ட குழுவில், பஞ்சப்படி அளிப்பது குறித்தும் மருத்துவப் படி அளிப்பது குறித்தும் ஆராய வேண்டுமென்று கேட்டுக் கொண்டதைக் கண்டித்துப் பேசியதாகவும் கூட்டத்தில் அவர் கூறினார்.

### கோரிக்கைகளை விட்டுக் கொடுக்கவா சங்கம்?

என். ஜி. ஓக்களுக்காகத்தான் என். ஜி. ஓ. சங்கம் செயல்படவேண்டுமென்றும், வேறு ஒரு சிலருக்காக சங்கம் என். ஜி. ஓ.க்களின் உரிமைகளை விட்டுக்கொடுத்து வளைந்து கொடுத்துச் செயல்படக் கூடாதெனவும், என். ஜி. ஓ. சங்கம் என். ஜி. ஓக்களுக்காகவே செயல்பட வேண்டுமென்றும், உரிமைகளை விட்டுக்கொடுப்பது என்றால், சங்கம் அவசியம் இல்லையென்றும், பெற வேண்டியதை பெறவேண்டிய நேரத்தில் பெற்றுத் தருவதற்குத்தான் சங்கம் இருக்கவேண்டுமென்றும், குறிப்பிட்டார்.

பின் புலவர் வள்ளியப்பன், பட்டதாரி ஆசிரியர்கள் போராட்டத்தை விவரித்தும் மற்ற ஆசிரியர்களது நிலை குறித்தும் பேசினார்.

கடைசியாக, கூடலூர் கிளைச் செயலாளர் நன்றி கூற கூட்டம் முடிந்தது.

---

## மன்னார்குடியில் ...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தி. மு. க செயலாளர் வி. கணேசனுடைய தலைமையில் பயங்கரமான ஆயுதங்கள் கொண்ட தி. மு. க ரவுடிகளால் தாக்கப்பட்டு கால் ஒடிந்து மன்னை மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருகிறார் அது சம்பந்தமாக கொடுக்கப்பட்ட புகார் மீதும் இன்றுவரை எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப்படவில்லை.

### போலீசுக்கு விருந்து

நயனுளை தாக்கிய கணேசன் மீதுதான் போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது ஆனால் போலீசார் கணேசனையும், ரவுடிகளையும் கைது செய்து நடவடிக்கை எடுப்பதற்கு பதில் அவர்கள் தி மு க. என்ற காரணத்தாலும், வட்ட, மாவட்ட தலையீட்டாலும் போலீஸ் அங்கே விருந்து சாப்பிடுவதோடு மட்டுமல்லாமல், மார்க்சிஸ்ட் தோழர்களையே அச்சுறுத்தி வருகிறார்கள்.

### முன்பு நடந்தது என்ன?

தி. மு. க. வைச் சேர்ந்த தையான் என்ற நபர் தாக்கப்பட்டார் என்று பொய்யாக வழக்குதயார் செய்த ஒருபுகார் மீது இதேசர்க்கிள் இன்ஸ்பெக்டர் அந்த பகுதி பூராவும் சென்று, இரவு நேரங்களில் தெருக்களில் புகுந்து ஜனங்களை அடித்து பயமுறுத்தி சித்திரையூர் ஊராட்சி மன்றத் தலைவர் ஏ ரெங்கன் மணக்கரை ஊராட்சி மன்றத் தலைவர் கே ர ஜீ, கட்சி தோழர்கள் மீது வழக்குப் போட்டு நீதிமன்றத்தில் விசாரணை நடந்து வருகிறது.

### வேலியே பயிரை மேயும் கொடுமை

ஆனால் இன்று மார்க்சிஸ்ட் தோழர் தாக்கப்பட்டு கால் ஒடிந்த நிலையிலும் இன்றுவரை சம்பந்தப்பட்ட நபர்கள் மீது நடவடிக்கையோ அல்லது அவர்களை கைது செய்யவோ இல்லை!

### போலீஸ் அதிகாரியா? அல்லது தி. மு. க. தலைவரா?

இதேபோல் தொடர்ந்து சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கலில் அந்தபகுதியில் மார்க்சிஸ்ட் கட்சிக்கு எதிராகத் தொடர்ந்து நடவடிக்கை எடுத்து வருவதுடன் இக்கொடுமையையும் அதிகாரியின் போக்கையும் கண்டித்து முன்பு ஒருபுரம் வடபாதி மங்கலத்தில் கம்யூனிஸ்ட் கட்சி கண்டன கூட்டம் நடத்தி அரசுக்கு தெரியப்படுத்தியுள்ளனது. எனவே இந்த அதிகாரி மீது உடனடியாக அரசாங்கம் நடவடிக்கை எடுப்பதோடு அந்தப் பகுதியில் நடந்துள்ள சம்பவங்கள் பூராவையும் பகிரங்க விசாரணை நடத்த வேண்டும் என்று தஞ்சை மாவட்ட விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் ஏ நடராசன் அறிக்கை விடுத்துள்ளார்.

---

## திருப்பூரில் பொதுக் கூட்டம்

திருப்பூர், மார்ச் 24—

திருப்பூர் மார்க்சிஸ்ட் கட்சிசார்பிலட ஷஹாலில் நடந்த பொதுக் கூட்டத்தில் 4000 பேர் கொண்ட கூட்டத்தில் இன்றைய அரசியல் நிலையும் தி. மு. க அரசு ஜன விரோதக் கொள்கை பற்றியும் தோழர் ஏ. பாலசுப்ரமணியம் பேசினார். இந்திரா ஆட்சியின் பாசிஸ்ட் அடக்குமுறை பற்றியும் நகரில் நடந்துவந்த பனியன் போராட்ட வெற்றி பற்றியும் பலத்த ஆரவாரத்திற்கிடையே பேசினார்.

திருப்பூர் கே. எஸ் கருப்புசாமி பனியன் தொழிலாளர் போராட்டத்தை பற்றியும், ஒப்பந்த விபரங்களை பற்றியும் தெளிவாக எடுத்துரைத்தார். கூட்டத்திற்கு ஆர். பொன்னுசாமி தலைமை வகித்தார்.

## பூட்டோவின் விசேஷ தூதர் சீனாவுக்கு பயணம்

புதுடெல்லி, மார்ச். 22—

பாகிஸ்தானின் கல்வி அமைச்சர் ஏ எச் மிர்ஷதா இன்று கராச்சியிலிருந்து சீனா, வடகொரியா, வடவியட்நாம் ஆகிய நாடுகளுக்கு புறப்பட்டுள்ளார். அதிபர் பூட்டோவின் விசேஷ தூதராகச் செல்லும் இவர் அந்தந்த நாட்டின் தலைவர்களிடம் பூட்டோ அனுப்பியிருக்கும் செய்தியைத் தெரிவிப்பார் என்று அறியப்படுகிறது.

---

## மேற்கு வங்கத்தில் புதிய...

(3-ஆம் பக்கத் தொடர்ச்சி)

**இந்த தொகுதியில் 1971-ல் நாங்கள் 29 ஆயிரம் மெஜாரிட்டியில் வெற்றி பெற்றோம்.**

எவ்வளவுதான் கற்பனை செய்து பார்த்தாலும் இந்திரா அலைதான் காங்கிரஸ் வெற்றி என்று கூறப்படுவதைக் கொண்டு வந்தது என்று நம்ப முடியுமா? நிச்சயமாக முடியாது. ஏனெனில் காங்கிரசுக்குப் பலமான பல இடங்களில் வெற்றியடைந்திருந்த போதிலும் காங்கிரஸ் — வலது கம்யூனிஸ்ட் கூட்டணியின் ஓட்டுகள் குறைந்துள்ளன. எங்களுடைய கூட்டணியின் ஓட்டுகளும் அப்படியே இருந்துள்ளன. அல்லது கூடியுள்ளன. இந்திரா அலை எங்களுக்குப் பலமான இடங்களில் மட்டுமே அடித்து எங்கள் ஓட்டுகளைக் குறைத்து காங்கிரஸ் கூட்டணியின் ஓட்டுகளை அளவில்லாமல் கூட்டியது என்று கூற முடியுமா? 1971 தேர்தலில் எங்களுடைய இடதுசாரி கூட்டணியின் ஓட்டுகளை விட காங்கிரஸ் - வலது கம்யூனிஸ்ட் கூட்டணியின் ஓட்டுகள் மிக அதிகமாக இருந்த இடங்களில் தேர்தல் மோசடி செய்ய வேண்டிய அவசியமில்லை என்பது இயல்பானதே. ஆகவே 1971-ம் வருட தேர்தல் புள்ளி விவரங்களின்படி இடதுசாரி முன்னணி நிச்சயமாக வெற்றி பெறக்கூடிய இடங்களில் விரும்பும் முடிவுகளைப் பெறுவதற்காக விரிந்த அளவில் மிரட்டல்களும், வெவ்வேறு மோசடிகளும் செய்யப்பட்டுள்ளன.

இந்த நிலைமையின் பயங்கரத்தைக் கவனித்து சம்பந்தப்பட்ட எல்லோருடனும் ஆலோசனை செய்து ஓரளவுக்காவது மீண்டும் தேர்தலில் மக்கள் நம்பிக்கை கொள்ளுமாறு செய்ய பொது விசாரணை நடத்துவது சாத்தியமா? வாக்குகளை எண்ணுவது, அறிவிப்பது உள்ளிட்ட ஒவ்வொரு கட்டத்திலும் தேர்தல் முற்றாக மோசடி செய்யப்பட்டிருப்பதால் நீதிமன்றத்தின் மூலம் பரிகாரம் காண முடியாது. இந்நிலையில் சுதந்திரமான நேர்மையான நிலைமைகளில் புதிய தேர்தலுக்கு உத்திரவிடுவதே பரிகாரம் காணும் வழியாகும். மேற்கு வங்கத்தில் நிகழ்ந்திருப்பது எல்லா இடங்களிலுமுள்ள ஜனநாயகவாதிகளுக்கும் கவலையளிப்பதாகும். ஏனெனில் இத்தோடு காங்கிரஸ் தப்பி விடுமானால் அதுஇந்தியா முழுமைக்கும் எல்லா மக்களுக்கும் முன்னால் காரிருள் சூழ்ந்த நாட்கள் இருப்பதைக் குறிப்பதாகும்.

உண்மையுள்ள,
ஜோதிபாசு.

---

## "சில்லறைந்த வழிசெய்வீர்!"

— நெய்னா —

சில்லறைக் கிராக்கி ஐயா!
சில்லறைக் கிராக்கிஇங்கு !!

உள்ளபடி சொல்லுகிறேன்
ஊரெங்கும் கேட்டுவிட்டேன்

நல்லபடியாயிருந்த
நாட்டிலின்று எங்கிருந்தோ

தொல்லைகளும் வந்ததுபோல்
இல்லையென்றும் வந்ததுவோ!

காப்பிக்கடை வாயிலிலே
'சாப்பிடுவோர் சில்லறையை

சேப்பினிலே வைத்துக்கொண்டு
சாப்பிடவும்' என்ற அட்டை!

மோப்பமிட்டு ஏப்பமிட்டு
ஆப்பக்கடை சென்றுவிட்டால்

காப்பிக்கடை பல்லவிதான்
காணுகின்றோம் இங்கும்ஐயா

பலசரக்குக் கடைசென்று
சிலசரக்கு வாங்கிவிட்டு

உளமிளக நின்றுநோட்டை
ஒப்புதலாய் நீட்டிவிட்டேன்

பலமுறையும் பார்த்துவிட்டு
பழையபதில் சொல்லிவிட்டார்

உளமுடைந்துவீடு சென்றேன்
உண்மைநிலை எண்ணலுற்றேன்.

நம்மரசு நல்லரசு!
நாடாளும் வல்லரசு!

சும்மாயிங்கு சொல்வதிலோ
சோம்பலற்ற பேரரசு !!

செம்மையுடன் சில்லறையை
சேர்த்துவிட்ட மேலவரை

நிம்மதியாய் வாழவிட்ட
நேர்மையுள்ள நல்லரசு!

அண்மையிலே சில்லறை
ஆனமட்டும் அச்சடித்து

நன்மைசெய்ய மக்களுக்கு
நாட்டில்விடு வோமெனவே

நம்மரசு விட்டசெய்தி
நாமறிந்து களிப்புற்றோம்

பொம்மலாட்டம் போலவது
பொய்த்துவிட்ட சேதியென்ன?

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் 18 முதல் சந்து, (வடக்குச் சித்திரை வீதி, மதுரை—1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்; கே. முத்தையா.